உ

கணபதி துணை.

# பருளை விநாயகர் பள்ளு

சென்னை:

வித்தியாநுபாலன அச்சகத்தில்

பதிப்பித்தது.

## உள்ளுறை




முதற்பதிப்பு 1889.
2-ம் ,, 1932.
3-ம் ,, 1956.





வித்தியாநுபாலன அச்சகம்,
நெ. 300, தங்கசாலைத் தெரு, சென்னை.

# பதிப்புரை

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினாற்
கண்ணிற் பணிமின் கனிந்து.

இப்பிரபந்தம் பண்டைநாளில் ஏட்டுப்பிரதியா யிருந்த போது யாழ்ப்பாணத்திலுள்ளவர்களால் சிரமத்தோடு பெற்றுப் படிக்க நேர்ந்தது. இதனை நீக்க சுழிபுரம் ச. சிவப்பிரகாச பண்டிதர் தமது நண்பர் வே. இரத்தின பிள்ளையின் வேண்டுகோளின்படி பல ஏட்டுப்பிரதிகளைப் பரிசோதித்து விரோதிஹு (1889) சென்னையில் அப்போதிருந்த சபாபதிநாவலரின் சித்தாந்த வித்தியாநுபாலன யந்திரசாலையில் அச்சிட்டு முதன் முதல் வெளியிட்டார்.

அப்பதிப்புப் பிரதிகள் மறைந்தமையால் பிரசோற்பத்திஹு (1932)ல் யான் இரண்டாம் பதிப்பாகக் குறிப்புரை, பழுளைத்தலமகிமை, ஆசிரியர் சரித்திரம், பள்ளுச்சிறப்பு முதலியவற்றோடு எனதுநண்பரும், சபாபதி நாவலரின் மருகரும், முதற்பதிப்பை அச்சிட்ட சிவப்பிரகாச பண்டிதரின் தமையனார் குமாருமாகிய அ. சிவகுருநாதன் மலேயா சுழிபுர ஐக்கிய சங்கத்தினரிடம் பெற்ற பொருளுதவிகொண்டு சென்னையில் அச்சிடலானேன்.

நாளடைவில் அப்பிரதிகள் செலவானபடியால் அந்நூல் இறந்துபடாமற் காப்பதற்காக நண்பர் கடந்த சில ஆண்டுகளாகப் பெருமுயற்சி செய்தனர். சுழிபுரத்திலுள்ள சில சிவநேயர்களோடு கூறி வற்புறுத்தினர். சுழிபுர

சங்கத்தினருக்கு விண்ணப்பித்தனர். இவரது விடா முயற்சிக்கு அவர்கள் இணங்கி மூன்றும் பதிப்பைத் தங்கள் செலவில் அச்சிடுவதாகப் பொருளுதவி புரிந்தனர். அவர்களுக்கும் நண்பர் சிவகுருநாதனுக்கும் பரஞ்சோதிப் பிரான் திருவருள் பாலிப்பாராக.

இச்சீரிய நூலுக்கு அரும்பதக் குறிப்புரையும் பள்ளுச் சிறப்பும் எழுதியுதவிய நண்பர்கள் திருவாவடு துறை ஆதீனவித்துவான் திருநெல்வேலி சிதம்பர ராம லிங்கம் பிள்ளை, சென்னைத் தமிழ்ப்பண்டிதர் கொ. இராம லிங்கத்தம்பிரான் ஆகிய இருவரும் இம்மூன்றும்பதிப்பைக் காணுமற் சிவபத மடைந்தமைக்கு வருந்துகிறேன்.

பறுளைத்தலமகிமை நண்பர் வடகோவை அ. சிவகுரு நாதனுல் புதுப்பிக்கப்பட்டது. ஆசிரியரின் சரித்திரம் சுன்னுகம் குமாரசுவாமிப்புலவரின் புலவர் சரித்திரத்தைத் தழுவி எழுதியதாகும்.

இந்நன்முயற்சியில் யான் இருமுறை ஈடுபடும்படி நேர்ந்தமைக்கு கணபதியை வாழ்த்தித் துதிக்கின்றேன். இந்நூற்பதிப்பு மேலும் மேலும் வருவதாக! அப்பதிப்பு களைச் சுழிபுரச் சங்கத்தினர் உரிமை பாராட்டி வெளி யிடுவாராகவும். இந்நூல் வேளாண்மையைச் சிறப்பிப்ப தால் இதனைப் பள்ளி மாணவரும் பிறரும் படித்து உய்யலாம்.

உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

திருமயிலை.
மன்மத, தைப்பூசம்.
27 - 1 - 56.
— சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளை.

# சின்னத்தம்பிப் புலவர் சரித்திரம்

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள நல்லூர். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு 180 வருடங்களுக்கு முன்னென்பர். இவர் அக்காலத்து உலாந்த அரசினராற் பாராட்டப்பட்ட பிரபுக்களுள் ஒருவரும், யாழ்ப்பாணத்திற் கல்வியை விருத்தி செய்த தமிழரசர்களுள் முதன்மையரான பரராசசேகரன் செகராசசேகரன் என்னும் இரு சகோதரர் வமிசத்திற் றோன்றினவரும், தமிழ் வித்துவானுமாக விளங்கியவருமான வில்லவராய முதலியாருக்கு மைந்தர். கலைமகளருளாற் கவி பாடுந்திறம் இளமையிலேயே வாய்க்கப் பெற்றவரென்பர். இவர் ஏழு வயசளவில் வில்லவராய முதலியார் வீடு யாது என்று வினவி வந்த புலவரொருவர்க்கு விடையாக அவர் வாசலிடைக் கொன்றை மரம் நிற்றலை அடையாளமாகச் சுட்டிக் கூறி அதனையும் வருணித்து வெண்பா ஒன்று பாடினவர். அவ் வெண்பாவாவது:

**பொன்பூச் சொரியும் பொலிந்தசெழுந் தாதிறைக்கும்**
**நன்பூ தலத்தோர்க்கு நன்னிழலாம்—மின்பிரபை**
**வீசுபுகழ் நல்லூரான் வில்லவரா யன்கனக**
**வாசலிடைக் கொன்றை மரம்.**

வில்லவராயர் வசித்த இடம் நல்லூர் வில்லடித்தெருமாளிகையாம். சட்டை நாதர் கோயிலுக்கு மேற்கிலுள்ள கொண்டலடி வைரவகோயில் என்னும் இடத்தில் புலவர் பிரமசாரியாக வாழ்ந்தனரென்ப.

இவர் இயற்றிய வேறு நூல்கள்: மறைசை யந்தாதி, கல்வளை யந்தாதி, கரவை வேலன் கோவை, நாலுமந்திரி

கும்மி முதலியன. மறைசை யந்தாதி வேதாரணியேசுரர் மேலது. இது இவர்தம் பதினெந்தாம் ஆண்டிற் சிதம்பர தரிசனம் செய்து மீளுங்கால், வேதாரணியத்திற் பாடப் பட்டதென்பர். கல்வளையந்தாதி சண்டிருப்பாயிலே கல்வளையிலிருக்கும் விநாயகர் மேலது. இது, இவர் தந்தையாரால் தொடங்கப்பட்டு விடப்பட்டிருந்ததை இவரால் முடித்துப் பூர்த்தி செய்யப்பட்டதென்பர். கரவை வேலன் கோவை யாழ்ப்பாணத்திலே கரவெட்டியிலே செல்வரா யிருந்த வேலாயுதப் பிள்ளை என்னும் பிரபு மேலது. நாலுமந்திரிகும்மி சண்டிருப்பாய் வேலுப்பிள்ளையால் 1934ல் அச்சிடப்பட்டுளது. இப்பிரபந்தங்களினால் இவர் பாரதம், இராமாயணம் முதலிய இலக்கியங்களையும், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் இலக்கணங்களையும் இனிதுணர்ந்தவர் என்பது புலப்படுகின்றது.

இவர் தமிழ்ப் புலமைக்காக அக்காலத்துப் பிரபுவாய் விளங்கிய வண்ணார்பண்ணைக் கணேசையரென்பவரால் பண்டாரக்குளம் என்னும் ஓர் வயல் இவருக்குப் பரிசாகக் கொடுக்கப்பட்ட தென்பர். இவர் காலத்தில் விளங்கிய தமிழ்ப் புலவர்கள்: கூழங்கைத் தம்பிரான், சித்தாந்த சரபம் - சொக்கலிங்க தேசிகர் * முதலியோர். விநாயகப் பெருமான்மீது இரு பிரபந்தங்கள் பாடி யிருப்பதால் இவருக்கு அப்பெருமான் உபாசனாமூர்த்தி போலும்!

---

* இப்புலவர்கள் விளங்கிய காலம் கி. பி. 1790 என்ப.

# பருளைத் தல மகிமை

யாழ்ப்பாணப் பட்டினத்துக்கு வடமேற்கில் சமுத்திரக் கரைக்குச் சமீபத்தில் தொல்புரம் சோழியபுரமென இரண்டு ஊர்கள் இருக்கின்றன. இரண்டுக்கும் இடையில் உள்ள தூரம் ஒரு மைல். தொல்புரமென்பது பழைய ஆசாரங்களை அநுட்டித்தவர்கள் இருந்ததினால் வந்த பெயரென்றும், சோழியபுரமென்பது இந்தியாவிலிருந்த சோழியர் இருந்ததினால் வந்த பெயரென்றும், சோழியர் புரம் சுழிபுரமென மருவியதென்றும் சொல்லுகிறார்கள். சுழிபுரம் முற்காலத்திய செந்தமிழ்க் கல்விக்கும் சைவாசாரத்திற்கும் உறைவிடமாக இருந்தது. இந்தச் சுழிபுரத்திலுள்ளது பருளாய் என்னும் இடம். பருளாய் என்பது பருளை என மருவியது.

திசைமழுவனென்னும் ஒரு சிற்றரசன் அரசு செய்த இடம் இதற்குச் சமீபத்திலுள்ளது என்பர். இந்த இடம் இப்போது மழுவைக்காடு என்று சொல்லப்படும். இந்த இடத்தில் திசைமழுவன் காலத்தில் விளங்கிய சம்பேசுரன் என்னும் சிவாலயம் இருந்த இடம் அழிந்துகிடப்பதை இப்போதும் காணலாம். இன்னும் இதற்குச் சமீபத்தில் ஸ்ரீராமபிரான் பாதம் வைத்த காரணத்தால் திருவடி நிலை எனப் பெயர் பெற்ற ஒரு ஸ்தலம் இப்போதும் வழிபடப்பட்டு வருகின்றது. இத்தலம் யாழ்ப்பாணத்துக் கீரிமலையைப்போல் மூர்த்தி தலம் தீர்த்த விசேடங்கள் பெற்றது. இங்கேதான் பருளை விநாயகர் முருகர்கோயில்களின் தீர்த்த உற்சவங்களும் பொன்னாலைக் கிருஷ்ணன் கோயில் தீர்த்த உற்சவமும் கொண்டாடப்படுவன. சம்புத்

துறை * என்றொரு கடற்றுறைமுகமும் இதற்குச் சமீபத்தி லுண்டு.

இந்தப் பகுதியில் ஒரு விநாயகராலயம் தமிழரசர் காலத்திற் கட்டப்பட்டிருந்தது. போர்த்துக்கேச அரசினர் மற்றைச் சைவாலயங்களை இடிக்கிற காலத்தில் இதனையும் இடிக்கத் தொடங்க, ஒரு காகம் வந்து இடிப்பித்த அதிகாரியினுடைய கண்ணைக் கொத்தி இடிக்க விடவில்லை. அதனால் அப்பிள்ளையாருக்குக் **கண்ணைக் கொத்திக் காக்கைப் பிள்ளையார்** என்று பெயர் வழங்கலாயிற்று. விநாயகரால யத்திற்குச் சமீபமாக முருகராலயமும் ஒன்றுளது. இவ் விரண்டாலயங்களும் இருக்குமிடம் வயல் சூழ்ந்த மருத நிலம்.

இவ்விநாயகர் கோயில் காலகதியில் சிலமடைந் திருந்தது. ஐம்பது அறுபது வருடங்களுக்குமுன் ஒரு வாறு புதுப்பித்துக் கும்பாபிஷேகம் முதலியன நடை பெற்றுள்ளன. இன்னும் நடைபெற வேண்டிய திருப்பணி வேலைகளுள்ளன. அவற்றுள் கோயிலுக்கின்றியமையாது வேண்டும் களஞ்சியம் மடப்பள்ளி இரண்டும் நெடு நாளாய்ச் சிலமடைந்திருக்கின்றன. இதுவரை எவரேனும் இவைகளைத் திருத்திக் கட்டிக்கொள்ளாமையினால் போலும் மலேய சுழிபுர ஐக்கிய சங்கத்தார் பொதுநன்மை

---

* சம்புத்துறை என்பது இந்தியாவிலிருந்து கொண்டுவந்த சிவலிங்கம் இறக்கப்பட்ட துறைமுகம் என்பர். இதற்குச் சமீபத் தில் மாதகல் என்னும் ஊர் உள்ளது. உமாதேவியின் திருவுரு வச்சிலை என்று பொருள்படும். **மாது - கல்** திருவிய இடம் இப் போது மாதகல் என மருவியதென்பர். சம்பு - சுகஞ்செய்பவன்.

சம்புகல் - மாதுகல் கடலோரத்தில் இருந்தன என்றும் சொல்வர்.

கருதிக் களஞ்சியம் மடப்பள்ளி வேலைகளை நிறைவேற்று தற்கு நன்கொடையாகப் பொருளுதவி செய்ய நிச்சயித் திருப்பது. இது இங்கே குறிப்பிடத் தக்கதொரு நற்செய்தி யாகும். இந்த நல்ல சந்தர்ப்பத்தில் பொதுசன வழி பாட்டுக்கும் நன்மைக்குமுரிய இக்கோயிற் காரியங்களைக் கிரமந்தவறாது நன்றாக நடத்தும் பொறுப்புடைய பரிபால கரும் உபயகாரரும் மற்றும் அபிமானிகளும் அறிவொற் றுமையோடு கலந்து ஷை சங்கத்தார் செய்யப்போகும் தொண்டினை வியந்து இப்பொது விஷயத்தில் அவர்க ளுக்கு ஊக்கமுண்டாகச் செய்தல் நன்றாம்.

மேலும் பருளை விநாயகர் முருகர் பவனிவரும் தேர் விநோதமானது. முன்னாளில் வடதேசத்துச் சிற்ப விற்பன்னர்களால் அழகுபெற அமைக்கப்பட்ட சித்திர வேலைப்பாடுகளைக் கொண்டு விளங்குவது. ஆயினும் இப்போது திருத்தப்படவேண்டியதாயிருக்கிறது. மலேய சுழிபுர ஐக்கிய சங்கத்தின் ஆதரவில் திருப்பணிகளுக்காகத் திரட்டப்படும் நிதியிலிருந்து இத்தேர்த்திருப்பணியாகிய புனருத்தாரண சற்கருமம் செய்தற்கு வேண்டும் நன் முயற்சி நடைபெறுவது வியக்கத்தக்கது.

---

# கோயிற்பரிபாலனம்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்பது சமய குரவர் திருவாக்கு. அதற்கேற்ப, பரிபாலகர் பூசகராவார் சமயக் கல்வியறிவு ஒழுக்கம் ஆசாரம் அனுஷ்டானம் தியாகம் உண்மை என்னும் பண்பினுல் தகுதியுடையராய் வழிபடும் அடியார்களுக்கு நல்வழிகாட்டிப் பொது நோக்குடன் பொது நலங்கருதிக் கோயிற் கருமங்களைச் சிரத்தையோடு தொண்டாகச் செய்தல் கடனாகும். இப்படி விதி முறைகளைப்பேணிக் கிரமந்தவருது பூசனை வழிபாடுகள் நடைபெறும் திவ்வியதலங்கள் திருக்கோயில்களெனப் போற்றப்படும். அத்தகைய திருக்கோயில்களையுடைய நாட்டில்தான் கால மழைபெய்யும்; பலவளங்களும் பெருகி நாடு செழிக்கும்; பொது நன்மைகள் விருத்தியாகும்; குடிகள் சுகமாய் வாழ்வர்.

ஆற்றரு நோய்மிகு மவனி மழைகுன்றும்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடிற் ருனே.

முன்னவனுர் கோயிற் பூசைகள் முட்டிடின்
மன்னற்குத் தீங்குள வாரிவளங் குன்றுங்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினிக்
கென்னருணந்தி யெடுத்துரைத் தானே.

—திருமந்திரம்.

கோயிற் பரிபாலனம் முறைகேடாக நடப்பதனுற் போலும் மேற்குறித்த குறைகளை இக்காலத்தில் எங்கும் மலிந்து காணப்படுகின்றன. இன்னும் கோயில்களுக்குரிய தருமச் சொத்துக்கள் அங்குமிங்கும் துர்விநியோகம் செய்யப்படு

தலைக் காணலாம். ஆலயங்களின் பரிபாலனம்* நன்முறையில் நடவாமை இதன்காரணமாகும். திருக்கோயிலில்லாத திருவிலூரைப்போல, கோயில் தருமச்சொத்துக்களைப் பேணிப் பாதுகாக்கப்படாத திருவிலூரும் அடவிகாடேயாமென்பதும் நோக்கத்தக்கது. உதாரணமாக, பறுளைப் பிள்ளையார் கோயிலுக்குரிய தருமக் காணிகளுள் சுழிபுரம் செட்டிகுறிச்சியில் வளவுக்காணி ஒன்றுள்ளது. இது நெடுங்காலமாய் பாதுகாப்பில்லாது கோயில் தருமத்துக்கு ஒருவகையிலும் பிரயோசனமில்லாது பாழாய்க்கிடக்கிறது. இப்படியாக ஷை கோயிலுக்குரிய காணியுண்டென்று இப்போது பரிபாலகராய் இருப்பவருக்குத் தெரியுமோ என்பதும் சந்தேகம். இந்தக்காணியைக் கவனித்து அறுக்கையாக வேலிபோட்டுக்கொண்டு பனை முதலிய வான்பயிர்களை உண்டாக்கிப் பார்வை செய்துவருதல் நன்று. இனிவருங் காலத்தில் அதன் புரோசனங்களைக் கோயிலுக்குபயோகமாகும்படி செய்யலாம்.

மேலும் இந்த இடத்திலுள்ள சிவன்கோயிற் சொத்துக்களும் பிறதருமச் சொத்துக்களும் சீர்கெட்டிருப்பதைக் காணலாம். கோயிற் பரிபாலனம் ஒழுங்காயிருந்தால் தருமச்சொத்துக்கள் அதர்மவழியில் வீணாய் ஒழியுமோ?

---

* "யாழ்ப்பாணத்துக் கோயில்கள் மிகவும் சீர்கெட்டுப் போயிருக்கின்றன. சைவசமயத்துக்கு நேர்ந்துள்ள பொல்லாங்குகளுள் எங்கள் கோயில்களுக்கு நேர்ந்துள்ள பொல்லாங்கு மிகக் கொடியது" என்பதும், "கோயில்களும் தருமச் சொத்துக்களும் நன்றாகப் பரிபாலிக்கப்படாது சீர்கெட்டிருக்கும்போது, திருத்தப்பட்டுள்ள இந்து அறநிலையச் சட்டமின்றியமையாத அருமையுள்ள நல்ல சட்டம் (a fine piece of legislation) என்பதும்" சைவப்பெரியார் ஸ்ரீ சு. சிவபாதசுந்தரம் அவர்கள் கருத்து.

நரும நன்கொடையான கோயிற்காணிகளை அலட்சியம் பண்ணி அவம்போகவிட்டிருக்கும் அக்கிரமத்தினாலன்றோ இங்குள்ள மற்றக் காணிகளும் வளங்குன்றிப் பயனில்லாது கிடக்கின்றன. இந்த இடம் முன்னிருந்த நிலைமாறி இங்கிருந்த குடிகளும் குறைந்து போயிருப்பதை இங்குள்ளார் கண்டுங் காணாதவராயிருப்பது கவலைக்கிடமானது. உத்தரவாதமில்லாதவராய் மனம்போனபடி நடக்கும் பரிபாலகரை நம்பி ஏமாந்து வாளாவிருப்பதை விடுத்து அவரை உத்தரவாதமுடையராகச் செய்வது வழிபாட்டுக்குரிய பொது மக்களைப் பொறுத்தகடமையாகும்.

கேவலம் நிலையில்லாத தற்பெருமை தற்புகழ்ச்சியான விளம்பரம், சுயநலம் என்னும் சிறுமைக்கிலக்காய் அவரவர் அற்பநோக்கம்பற்றி "எனக்கெனக்கென்று" உரிமையும் முகாமையுங் காட்டிக்கொள்ளும் ஆசையினால் போலிவகையான சிலர் கோவில் என்பதன் மகிமையைப்பற்றிச் சிறிதும் சிந்தனையில்லாது, தவம் செய்தற்குப்பதிலாக, விவகாரங்களில் ஈடுபட்டு அவம் செய்வதில் வீண்காலம் போக்குதலால் கோயிற் பரிபாலனம் சீர்கெடும். அதனால் வரும் பழி பாவத்துக்கஞ்சி, கோயிலுக்குரிய பணிகளில் பேர் ஊக்கமுடையராதல் வேண்டும். அதுவொன்றோ! உத்தம கைங்கரியமான கோயிற் பூசைகளைக் கிரமப்படி பயபத்தி விசுவாசமாகச் செய்தற்குரிய சைவாசார சம்பிரதாயமுடைய அர்ச்சகர் நல்லெண்ணமும் ஒத்துழைப்பும் முறையான கோயிற்பரிபாலனத்துக்குப் பிரதானமாய் வேண்டப்படுவதொன்றும்.

முன்னைநாளில் சுழிபுரம் நல்ல நிலையிலிருந்தமையினாற் போலும் "தொல்லுலகம் போற்றும் சுழிபுரம்" என இந்நூலாசிரியர் காப்புச்செய்யுளில் கூறினார். இவ்விதமாக

இந்நகரச் சிறப்பைமட்டும் இக்காலத்தவர் எடுத்துவிதந்து கூறுவது போதியதன்று. தம்முன்னோரைப்போல அதன் நற்கீர்த்தியைப் பலவிதத்திலும் பரவச்செய்ய முயற்சி செய்யவேண்டியதே அவர்கள் பெருங்கடனாகும். மற்றும்:

**மூர்த்தி தல்ந்தீர்த்தம் முறையாற் றொடங்கினர்க்கோர்**
**வார்த்தை சொலச்சற்குருவும் வாய்க்கும் பராபரமே.**

என்று கூறியபடி பிள்ளையார் - முருகமூர்த்தி கோயில்களின் அருகாமையிலுள்ள கேணிகளாகிய நீர்நிலையங்களைச் சுத்தமாக வைக்கவேண்டிய முறைகளைத் தேடி சீர்திருத்தல் அவசியமாகும்.

**சுழிபுரம் சங்கத்தார்.**

## பள்ளுச் சிறப்பு முதலியன

"புறளை விநாயகர் பள்ளு" என்னுஞ் சொற்றொடர் புறளை என்னுந் திருப்பதியில் எழுந்தருளிய விநாயகரைப் பற்றிய பள்ளு அல்லது இசைப்பாட்டு என்று பொருள் படும். பள்ளு என்பது தொண்ணூற்றாறு பிரபந்தங்களுள் ஒன்று. இப்பிரபந்தத்தை உழத்திப் பாட்டு எனவுங் கூறுப. இது வேடிக்கையான நாடகத்தின் பாற்படும்; பள்ளர், கன்மர், கடைஞராகிய உழவர்களால் மருத நிலத்தில் நிகழும் ஓர் ஊடலாகும். இதன் இலக்கணம்.

"புரவலர் கூறி யவன்வா ழியவென்
றகல்வயற் றொழிலை யொருமை யுணர்ந்தன
ளெனவரு மீரைந் துழத்திப் பாட்டே."

என்ற பன்னிரு பாட்டியற் சூத்திரத்தால் அறியலாம்.

உழத்திப் பாட்டின் விளக்கமாவது:—கடவுள் வணக்க முறையே மூத்தபள்ளி, இளையபள்ளி, குடும்பன் வரவோடு அவன் பெருமை கூறல் முறையே அவர் வரலாறு, நாட்டு வளம், நகர்வளம், குயிற்கூக் கேட்டல், மழை வேண்டிக் கடவுட் பரவல், மழைக்குறி ஓர்தல், மழை பொழிதல், ஆற்றின் வரவு, அதன் சிறப்புக் காண்டல் இவற்றிற் கிடையிடை அகப் பொருட்டுறையுங் கூறிப் பண்ணைத் தலைவன் வரவு, பள்ளிகளிருவர் முறையீடு, இளையாளை அவனுரப்பல், பள்ளன் வெளிப்படல், பண்ணைச் செயல் வினவல், அவனது கூறல், ஆயரை வருவித்தல், அவர் வரல், அவர் பெருமைகூறல், மூத்தபள்ளி முறையீடு, குடும்பன் கிடையிவிருந்தான்போல வரல், அவனைத் தொழுவின் மாட்டல், அவள் புலம்பல், மூத்தபள்ளியடிசிற் கொடுவரல், அவன் அவளோடு கூறல், அவன் அவளை மன்னித்தல், கேட்க வேண்டல், அவள் மறுத்தல், அவன் சூளுறல், அவள்

அவனை மீட்க வேண்டிப் பண்ணைத் தலைவனைப் பரவல், விதை காளை முதலிய வளங்கூறல், உழவருழல், காளை வெருளல், அது பள்ளனைப் பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவன் எழுந்துவித்தல், அதைப் பண்ணைத் தலைவற்கு அறிவித்தல், நாறு நடல், விளைந்தபிற் செப்பஞ் செயல், நெல் அளத்தல், மூத்தபள்ளி முறையீடு, பள்ளிகளுள் ஒருவர்க் கொருவர் ஏசலென இவ்வுறுப்புக்களுறப் பாட்டுடைத் தலைவன் பெருமை ஆங்காங்குத் தோன்ற அளவடியாய் முதற்சீர் வெண்சீராய் ஏனைய சீர் முதலசை நிரையசை யுற்ற வெண் சீராயும் அல்லது இயற்சீர் வெண்சீர் ஒன்றி வருவதுமான ஒரு கலிப்பாவும் பற்பல சந்தச் சிந்தும் விருத்தமும் விரவிவர இவற்றாற் பாடுவது. இவ்வுறுப்புக் களுள் சில குறைந்து வருதலுமுண்டு. அதற்கு உதாரணம் இந்நூலேயாகும்.

இந்நூலில், ஆன்றோர் வழக்கின்படி காப்புச் செய்யுளுழ், விநாயகர், நடேசர், சிவகாமியம்மையாகிய இவர்களது துதியும், பள்ளியர் தோற்றமும், பள்ளியர் வரலாறு கூறலும், பள்ளன் தோற்றமும், பள்ளியர் தத்தம் நாட்டுவளங் கூறலும், குலமுறை கிளத்தலும், குயில் கூவுதலும், மழை கேட்டலும், ஆற்றுவரத்தும், பண்ணைக்காரன் தோற்றமும், ஆண்டையை வணங்கலும், விதைவகை கேட்டலும், முறைப்பாடும், பள்ளன் மூத்த பள்ளியை வேண்டலும், மூத்தபள்ளி ஆண்டையை வேண்டலும், பள்ளன் ஆண்டைக்குக் கணக்கொப்பித்தலும், முகூர்த்தங் கேட்டலும், மூத்த பள்ளியிரங்கலும், நாற்றுநடவும், அதன் விளைவும் கூறப்பட்டு, கழிக்கரைப் புலம்பல், தலைவன் பொருள்வயிற் பிரிவில் தலைவி யிரங்கல், தலைவியைப் புகழ்தல், தலைவன் பொருள்வயிற் பிரிந்துழித் தலைவி வருத்தம் பாங்கி கூறல்,

நற்றாயிரங்கல் முதலிய அகப்பொருட்டுறைகளிடை யிடையே விரவியும் வெண்பாவும், விருத்தமும், சந்தவிருத்த மும், கலிநிலைத்துறையும், கட்டளைக் கலித்துறையும், கலிப் பாவும், கொச்சகமும், சிந்தும் விரவப்பெற்றுள்ளன. இந்நூல் சொற்சுவையும் பொருட்சுவையும் உடையது.

இதில், மீன் வகைகளும், மாட்டின் வகைகளும், நெல் லின் வகைகளும், அக்காலத்தில் வழங்கிய பள்ளிகளுடைய பெயர்களும், ஆண்டையைப் பள்ளிகள் சிறப்பித்துப்பேசும் வகையும் நன்கு அறியலாம். சில நீதிகளும் பழமொழி களும் கூறப்பட்டுள்ளன. சில புராண கதைகளும், திருக் குறள் முதலிய நூல்களின் கருத்துக்களும் காணலாம். 'மழை கேட்டல்' (பா-66) என்னுமிடத்து மழைக்கோள் வக்கிரித்தலைக் கூறியதும், விதை வகை கேட்டல் என்னு மிடத்து "மற்றப் பாம்புக்கும் பூரத்துக்கும் பகல் வைத்த நாளுகமொன்றுண்டே யாண்டே" (பா-86) எனக் கூறி யதும், கொழுவைப்பற்றிக் கூறுமிடத்து, "மாணிக்கஞ் சொன்ன கோவையிலே கொழுவைத்திருப்பது பார்மின்கா ணுண்டே" (பா-90) எனக் கூறியதும், உழவெருதைப் பற்றிப் பேசுமிடத்து, "உழுதகாளை யொன்றுண்டது பொன்னுலையூரிலே வாருங்காட்டுவேனாண்டே" (பா-91) எனக் கூறியதும், பருளை வீரதேவன் வயலிலுள்ள மண் வளத்தைச் சோதித்து, "ஊற்றுதேன் பொழில்சூழ் தென் பருளை" (பா-108) என்று சிறப்பித்துக் கூறியதும், இவை போன்ற வேறு சில தொடர்களும் வியக்கற்பாலனவா யுள்ளன.

எல்லாச் சிவ க்ஷேத்திரங்களுக்கும் 'பள்ளு' உண் டென்பர். சில தலங்களில் துவஜாவரோகண தினத்தில் உருத்திரகணிகையர் பள்ளைப் பாடிக் காப்பை அவிழ்ப்பது வழக்கமா யிருக்கின்றது. சில பள்ளுகளே ஆன்றோரால் போற்றப்பட்டு வருவதாகத் தெரிகின்றது. அவற்றுள்ளும் பல இதுவரை அச்சிடப்படவில்லை.

---

உ

கணபதி துணை.

# பருளை விநாயகர் பள்ளு

## காப்பு

தொல்லுலகம் போற்றுஞ் சுழிபுரம்வா ழைங்கரன்மேற்
பல்வளஞ்சேர் பள்ளினிசை பாடவே—வில்வழங்கு
மையாழிக் கண்ணன் மலர்க்கண் வளர்ந்ததிருக்
கையாழிக் கண்ணனே காப்பு.

பள்ளினிசை - பள்ளுப்பாட்டு. இசை - பாட்டு. இன் - தவிர் வழி வந்த சாரியை. வில் - இந்திர தனுசு. மை - மேகம்; அம் மேகம் படியும் ஆழி என்க. ஆழி - கடல். கண் - ஏழனுருபு. நன்மலர்க்கண் - நல்ல தாமரை மலர்போன்ற திருக்கண். வளர் தல் - உறங்குதல். கையாழிக் கண்ணன் - வலத் திருக்கரத்திலே சக்கரப்படையைத் தாங்கிய திருமால்.

## துதி

### விநாயகர்

நந்து தவழ நதிதனி லாம்ப னனிமலருஞ்
சுந்தரஞ் சேரும் பழனப் பருளையிற் றோன்றுசுடர்
வந்தெதிர் நின்ற கயமுகன் றன்னை வதைத்ததந்த
வைந்து கரப்பிள்ளை யென்னகத் தேநின் றருள்செயுமே.

நந்து - சங்கு. சங்கு நதியில் தவழ என்க. அதனது தண் ணிலவொளியால் வயலிலுள்ள ஆம்பல் மலர்கின்றது. சுந்தரம் - அழகு. பழனம் - வயல். சுடர் - பரஞ்சோதி. கயமுகன் - கய முகாசுரன். சுடரும், வதைத்ததுமாகிய ஐந்து கரப்பிள்ளை ன்க. தீயோனுகிய கயமுகாசுரனை வதைத்த பிரானுதலின், ந்நூற்குவரும் இடையூற்றை அவன் நீக்கி யருளுவனென்பது ருத்தாகக் கொள்க.

## நடேசர்

சுருதி யின்முத லாகிய காரணர்
துளைபொ லிகர வாரண மாமுகர்
சுழிபு ரநகர் மேவுப ருளையி லுறைநாதர்
கரும ணிவிழி யாளுமை பாலகர்
கதிரை யின்வடி வேலர்ச கோதரர்
கருணை யின்மத தாரையி னூர்பனி னிசையோதச்
செரும ருவுத்ரி சூலவ ராயுதர்
திரிதி ரிபுர கோபர நாமயர்
திகழி ரணிய மேருச ராசனர் பணிநாணர்
பொருமு ழுவையி னீருரி யாடையர்
புரிச டைவளை சோமக லாதரர்
பொதுவி னினட மாடிய சேவடி மறவேனே

சுருதியின் முதல் - பிரணவம். துளை - துவாரம். துளை பொலிகரம் - துதிக்கை. வாரணம் - யானை. கதிரை - கதிர்காம மென்னுந் திருப்பதி. கருணையின் - இன்-தவிர்வழி வந்த சாரியை. மததாரை - மதமழை. செருவிலே பொருந்திய முத்தலைச் சூலம். செரு - போர். வர ஆயுதர் - மேலான படையையுடையவர். திரி திரிபுரம் - மூவுலகங்களினும் திரியும் முப்புரம்; அவற்றைச் சினந் தவரென்க. அநாமயர்-அநாதியே பாசங்களினீங்கியவர். ஆமயம்- பாசம். 'ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டார்' என்பது தமிழ் வேதம். இரணியமேரு - பொன்மயமான மகாமேருமலை. சராசனம் - வில்: அம்பைத் தள்ளுவதென்பது உறுப்புப் பொருள். பணி - பாம்பு; இங்கே ஆதிசேடன்: வாசுகியுமாம். நாண் - வில்லி னுண். உழுவை - புலி. புரிசடை - முறுக்குண்ட சடை. வளை சோமகலாதரர் - வளைந்த சந்திரகலையைச் சூடியவர். பொது அம்பலம்; இங்கே திருச்சிற்றம்பலம். ஓத மறவேன் எ முடிக்க.

## சிவகாமியம்மை

தோட்டு வாரிச நான்முகன் பேணிய
தும்பி மாமுக னம்புவி தாங்கிய
சேட்டு மேருவிற் பாரதந் தீட்டிய
தென்ப ருளைப் பரஞ்சோதி யன்னை
கோட்டு வாரணி கொங்கைப் பெருக்குங்
குழற்சு ருக்கு மணிவாய் முருக்கும்பஞ்
சூட்டு சீறடி யுந்துடி நேரிடை
யுடையு மெங்கணு மென்கணி னின்றவே.

தோடு - பூவிதழ். வாரிசம் - தாமரை. பேணுதல் - ஈண்டு வழிபடுதல். தும்பி - யானை. சேடு - பெருமை. தீட்டுதல் - எழுதுதல். பரஞ்சோதி அன்னை - பரஞ்சோதி விநாயகப்பிரானது திருத்தாய். கோட்டுக்கொங்கை - யானைக் கொம்பு போன்ற கொங்கை. வார் - கச்சு. குழற்சுருக்கு - கூந்தலினது கட்டு. முருக்கு - முருக்கம்பூப்போன்ற இதழ். பஞ்சு ஊட்டு சீறடி - செம்பஞ்சுக் குழம்பு எழுதப்பட்ட சிற்றடி. துடிநேர் இடை - உடுக்கை போன்ற இடை.

## நூல்

## பள்ளியர் தோற்றம்

குத்துமுலைக் குவடுகுலுங் கத்தாள வடம்புரளக்
குமுதச்செவ் வாயின்வெள்ளி நகையரும்பத்
தத்துவரிக் கயலைவெருட்டிப் பத்திமணிக் குழையொடுமுட்
தாரைமணிக் கண்களிரண்டுந் தாவடிசெல்லச் [டித்
சித்தியளித் திடுபுகழி புரநக-ருறை-யத்திமுகக் கணபதி
சேடனுநாவா லசைக்கரிய சீரிசைபாடி [பணபதிச்
செத்திசையும் புகழுநிதிக் கோனளகாபுரியென் றெவருமெ
மீழமண் டலப்பள்ளி தோற்றினளே. [திக்கு

குவடு - மலை. தாளவடம் - முத்துவடம். குமுதம் - செங்குமுதமலர். வெள்ளி நகை - வெண்மையான பற்கள். வெருட்டி - அஞ்சுவித்து. பத்திமணிக்குழை - வரிசையாகவுள்ள இரத்தினங்கள் அழுத்திச் செய்யப்பட்ட குழையென்னுங் காதணி. தாரை - கூர்மை. தாவடி - போர். 'தாவடி யோட்டு மயிலிலும்' 'தண்டு தாவடி போய்' எனவும் 'ஆயிரமக்கடாவடி போயினார்' எனவும் பிறரும், 'துணைவரி யம்பகந் தாவடி செல்குழையாள்' என இவ்வாசிரியரும் கூறுமாற்றால் இஃது இப்பொருட்டாதலறிக. கண்கள் இரண்டும் வெருட்டி முட்டித் தாவடி செல்ல என்க. சித்தி - மஹேஸ்வர்ய நிறைவு: அஷ்டமாசித்தியுமாம். அத்தி - யானை. பணபதிச்சேடன் - ஆயிரபண மகுடங்களையுடைய பாம்புகளுக்கு அரசனாகிய ஆதிசேடன். அசைக்க அரிய - சொல்ல முடியாத. 'நாவசைத்தார்' என்பர் முன்னும். நிதிக்கோன் - குபேரன். குலுங்கப் புரள அரும்பச் செல்லப் பாடிப் புகழுமாறு தோற்றினாளென்று முடிக்க. இது மூத்த பள்ளித் தோற்றம். (1)

சின்னவிடை நூலிறுமிறு மெனச் சீறடியிற் சிலம்பு புலம்பச்
சிறியநுதற் பிறையணிவட்டச் சுட்டியிலங்கப்
பொன்னசலக் குசமதி னவமணி மின்னுதனக் கச்சு நெகிழப்
புனைந்தகருங் கொண்டையில்வண்டு புரண்டு நெருங்கச்
செந்நெல்வயற் சுழிபுர நகருறை கன்னமதத் திறையவர் ப[ுகழ்]
சேவடியைத் திக்குநோக்கித் தெண்டம்பண்ணிச் [புரச்]
சொன்னநிலத் துறுவசி யிவளென வன்னமெனப் பிடியென
சோழமண் டலப்பள்ளி தோற்றினளே. [நிதிவளர்]

இடைநூல் - நூல்போன்ற இடை. இறும் இறும் என இற்றுவிடும் இற்றுவிடும் என்று. சீறடி - சிறிய அடி. சிலம்பு - காலணி விசேடம். புலம்ப - ஒலிக்க. நுதல் - நெற்றியில். பிறையணிவட்டச் சுட்டி - பிறைபோன்ற அழகிய வட்டமாகிய நெற்றிச் சுட்டி. பொன் அசலம் - பொன்மலை: அது மகாமேரு. மேரு போன்ற குசத்தில். குசம் - கொங்கை. அது - பகுதிப் பொருள்

விகுதி. நவமணி - நவமணி சோத்து விளங்கும் மாலை. கன்னம் - காது. பரிபுரம் - சிலம்பென்னுங்காலணி. தெண்டம் பண்ணுதல் - சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல். சொன்ன நிலம் - பொன்னுலக மெனப்படும் தேவலோகம். உறுவசி - ஊர்வசி யென்னுந் தெய்வப் பெண். பிடி - பெண் யானை. இஃது இளையபள்ளித் தோற்றம்.

(2)

## பள்ளியர் வரலாறு கூறல்

தோடார் குழலசைய நுதல்வேர் வரும்பியெழத்
துடியுங் கொடியுமன்ன மருங்கு னெருங்கக்
கோடா னவைகுலுங்க மணிமேகலைக ளார்ப்பக்
குழையுங் கயலுஞ் சென்று நின்றுறாடவே
நீடானை யேறுசந்த்ர சூடா மணிக்குவந்த
நித்தன்பா ரதக்கதையை யாடகக் குன்றை
யேடாக வெழுதினோன் றிருநாமம் பாடியாடு
மீழமண் டலத்தினிற் பள்ளி நானே.

தோடார் குழல் - பூவிதழ் பொருந்திய கூந்தல். வேர்வு - வியர்வை. துடி - உடுக்கை. மருங்குல் - இடை. கோடு - உவமை யாகுபெயர். மேகலை - அரைப்பட்டிகை: அஃது எழுகோவை யுடையது. காதிற் குழையும் கயல்போன்ற கண்ணும் ஒன்றோ டொன்று சென்று சேர. ஆடப்பாடியாடு மென்க. நீடு ஆன் - பெருமை மிகுந்த இடபம்: நீடு ஆனை யெனக்கொண்டு பெருமை மிகுந்த அயிராவணமென்னும் யானை யென்றலுமாம். சந்திர சூடாமணி - சிவபெருமான். சிவபெருமானுக்குப் பிரியம்வாய்ந்த என்க. நித்தன் - அழிவில்லாதவன். ஆடகக்குன்று - மாமேரு. இது மூத்தபள்ளி தன் வரலாறு கூறியது.

கோங்கிளம் புதியமுகைக் கொங்கைக் கௌரிமைந்தன்
கூறுபுகழ்க் கல்லாம னுவசையார்
தாங்குபணி யரையிற்பூட்டு பிரான்பங்கயத்
தாளுக்கல் லாமற்சென்னி சற்றும்வணங்கார்

வீங்குகடல் குடங்கைகொண்டான் கரகநீர்பூ
விட்டான்கோ யிலையன்றிச் சூழ்ந்து துதியார்
தூங்குதழை செவியன்பத்திமைத் தொண்டர்வாழுஞ்
சோழமண் டலத்தினிற் பள்ளி நானே.

முகை - அரும்பு. கௌரிமைந்தன் - இங்கே விநாயகப்பிரான். கூறுபுகழ் - கூறப்படும் தகுதிவாய்ந்த சீர்த்தி. பணி - பாம்பு. சென்னி - தலை. வீங்குகடல் - நீர்மிக்க கடல். கடல் குடங்கை கொண்டான் - அகத்தியமுனிவன். குடங்கை - உட்குழிந்தகை. அகத்திய முனிவனது குண்டிகையிலிருந்த காவிரியைப் பூமியிற் பெருகச் செய்தவனென்க. அசையாரும் வணங்காரும் துதியாரு மாகிய பத்திமைத் தொண்டர். விநாயகப் பெருமான் அரையிற் பாம்பணிந்திருத்தலைப் 'படந்தாழ் கச்சைப் பாம்பொடு தழீஇ' என்பதனான் அறிக. காவிரியை அப்பெருமான் பூமியில் விடுத்த வரலாறு **கந்தபுராணத்துக்** கூறப்பட்டது. இஃது இளையபள்ளி தன் வரலாறு கூறியது. (4)

## பள்ளன் தோற்றம்

சுற்றுகருங் கச்சைக்கட்டி மாதுளம்பூ வுறுமால்
சோரவிட்டுக் கட்டித்துள்ளு மீசை முறுக்கி
வெற்றியரக் குங்குடித்து நீற்றையும்பெ ருக்கப்பூசி
மேல்வளைய லுந்தரித்து விழிகள் சிவந்து
பற்றியமண் வெட்டிவைத்துச் சருக்கி நடந்து - தங்கப் -
பாளத்தாற் சமைத்தகொட்டுத் தோளிற்சுமந்தே
யெற்றவரு மொற்றைமணிக் கொற்றக்கொம்பன் பண்ணை
மீழமண் டலப்பள்ளன் றோற்றி னானே. [பார்க்கு

அரையிற் சுற்றப்படும் கரிய கச்சை. உறுமால் - ஆடைவிசே டம். சோர விட்டுக்கட்டி - பிடரிப்பக்கம் தூங்குமாறு விட்டுத் தலையிற் கட்டி. அரங்கு - சாராயம். மேல் வளையல் - மணிக்கட்டுக்கு மேலிடத்து அணியப்படும் வளையல். ஒரு மண்வெட்டியைக் கையிற் பிடித்தும் மற்றோர் மண்வெட்டியைத் தோளிற் சுமந்தும்

வருகின்றான் என்க. கொட்டு - மண்வெட்டி. பகைவரை எற்று தற்குப் பயன்படும் ஒற்றைக் கொம்பு. அவனது பண்ணையைப் பார்க்கும் பள்ளன். இஃது பள்ளன் தோற்றம் கூறியது. (5)

**கொச்சகம்**

பொய்யூரு மிடைக்கெளரி புதல்வனெழிற் புரிக்கோடு
செய்யூருஞ் சுழிபுரத்துச் சேர்ந்தபரு ளையிலுறையு
மையூர்முத் தானவள்ளன் மணிநாட்டு வளம்பேசப்
பையூருங் களிநிதம்பப் பள்ளியர்நா வசைத்தாரே.

பொய் ஊரும் இடை - பொய்யென்று சொல்லப்படும் இடை. எழில் - அழகு. புரிக்கோடு - புரிகளையுடைய சங்கு. செய் - வயல். மையூர் முத்தானம் - கருநிறம் பொருந்திய மும்மத நீர். அதனை யுடைய வள்ளல் பரஞ்சோதி விநாயகப்பிரான். பை - பாம்பின் படம். களிநிதம்பம் - களிப்பைத் தரும் அல்குல். நிதம்பம், அல்குல், கடிதடம் ஒரு பொருட் சொற்கள். இவை இடுப்பின் கீழுள்ள பின்புறத்தைக் குறிப்பன. 'பஸ்சாத் நிதம்ப: ஸ்த்ரீ கட்யா:' என்பது அமரகோசம். (6)

## பள்ளியர் தத்தம் நாட்டுவளங் கூறல்

போற்று மாதுளை மாணிக்க வித்தைப்
பொதிந்த சோதிக் கனிபல தூக்குந்
தாற்று வாழை யிலைசென்று மாகத்
தரணி மேலால வட்ட மசைக்குந்
தோற்று மாசினி முட்புறச் செம்பழஞ்
சுட்ட பொன்னின் சுளைபல தூற்று
மேற்று வாளை கமுகிற் குதித்திடு
மீழ மண்டல நாடெங்க ளூடே.

மாணிக்க வித்து - மாணிக்கம் போன்ற விதை. தாறு - குலை. மாகத் தரணி - விண்ணுலகம். ஆசினி - பலாவிசேடம். சுட்ட பொன்னின் சுளை - உருக்கி ஓடவைத்த பொன்போன்ற இனிய

சுளை. எற்று வாளை என்பது 'கடல்வாழ் சுறவுமேறெனப்படுமே' என்பதன் உபலக்கணத்தால் வந்தது. தூக்கும் முதலிய நான் கினையும் பெயரெச்சமாகக் கொண்டு ஈழமண்டல நாடென்பத னோடு முடிக்க; அன்றி அவற்றை வினைமுற்றாகக் கொண்டு அத்தகைய எனச் சொல்விரித்து ஈழமண்டல நாடென்பத னோடு முடித்தலுமாம். பிறவும் அன்ன. (7)

காடெல் லாங்கரி மான்தஞ் சேருங்
கடலெல் லாம்வெள் வலம்புரி யூரு
நாடெல் லாங்கதிர்ச் சாலி தழைக்கு
நரம்பெல் லாமிசை யேழை யழைக்கும்
வீடெல் லாம்வள்ளைப் பாட்டொலி பூணும்-விண்-
மீனெல் லாந்தண் டலைத்தலை காணுந்
தோடெல் லாம்பொறி வண்டுபண் பாடிய
சோழ மண்டல நாடெங்க ளூடே.

கரி - யானை. மான்மதம் - கஸ்தூரி மிருகம். வெள்வலம்புரி- வெண்மையான வலம்புரிச் சங்கு. இசையேழ் - சப்தஸ்வரம்: இங்கே சம்பூர்ண ராகம். வள்ளைப்பாட்டு - உலக்கைப் பாட்டு. தண்டலை - சோலை: தலை - ஏழனுருபு. தோடு - பூவிதழ். பொறி- புள்ளி. (8)

கண்ண கன்ற வரைத்தலைச் செம்மணிக்
காந்தி தூயநந் தாவிளக் கோர்பால்
வண்ண வேய்ங்குழ லூதண்ட ராவின்
மணியி னோசை கறங்குவ தோர்பால்
பண்ணை யோதிமக் கூட்டமு மோர்பால்
பவளக் கொம்பிற்கம் பூர்வது மோர்பா
லெண்ணி னுனில மும்புடை யோங்கிய
வீழ மண்டல நாடெங்க ளூடே.

கண் - இடம். வரைத்தலை - மலையில். காந்தி - ஒளி. நந்தா - கெடாத. வேய்ங்குழல் - மூங்கிலாற் செய்யப்பட்ட இசைக்குழல்.

அண்டர் - இடையர். ஆவின் கழுத்திற் கட்டிய மணி. கறங்குதல்- ஒலித்தல். பண்ணை - வயல். ஓதிமம் - அன்னம். பவளக்கொம்பு- பவளக்கொடி. கம்பு - சங்கு. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்த லென்னும் நானில வளமும் கூறியவாறு. (9)

மின்னுங் காருங் கரும்புமுத் தீனும்விண்
மீனு மீனு மணிமுத்த மீனு
முன்னுங் கார்மத வேழமுஞ் சேர்கழை
யோங்கல் வேழமு மாரம் பயக்கும்
பன்னுஞ் சீதளப் பங்க யராசியும்
பாண்டுக் கூனற் பணிலமுஞ் செங்கார்
துன்னுஞ் சாலிக் குழாமு நிறைந்தொளிர்
சோழ மண்டல நாடெங்க ணுமே.

மின்னுங்கார் - மின்னலைச் செய்யும் மேகம். விண்மீன்- நக்ஷத்திரம் போன்ற பெண்கள்: 'மாதரொத் தனவுடுத் தோற்றம்' என்பது கந்தபுராணம். உன்னும் - உயர்வாக எண்ணப்படுகின்ற. சேர்கழை ஓங்கல் வேழம் - புனர்பூச நக்ஷத்திரத்தை அளாவிய மூங்கிலாகிய வேழம்: உயர்ச்சியையுடைய முங்கிலுமாம். ஆரம் - முத்து. பங்கயராசி - தாமரைத் தொகுதி. பாண்டு - வெண்மை. கூனற் பணிலம் - வளைவினையுடைய சங்கு. செங்கார் - செவ்விய கார்காலம். சாலி - செந்நெல். இதனுள் முத்துப் பிறக்குமிடங்கள் ஒன்பதும் கூறப்பட்டன. (10)

கோரந் தோய்ந்த வரியஞ்ச னத்தின்
குழம்பு தோய்விழிக் கொம்பனை யார்தா
மாரந் தோய்ந்த களபக் கடாசல
மன்ப னார்புயக் கந்தினிற் பூட்ட
வாரந் தோய்சந் தனமணந் தோய்ந்து
வயங்கு மின்னிசைத் தண்டமிழ் தோய்ந்தே
யீரந் தோயு மிளந்தென்றல் வந்தசை
யீழ மண்டல நாடெங்க ணுமே.

கோரம் - நஞ்சு. வரி - கண்ணிலுள்ள செவ்வரி. ஆரம் — சந்தனம். கடாசலம் - மதமலை: யானை; இங்கே கொங்கை. கொம்பனையார் தமது கொங்கையாகிய யானையைத் தமது கண வரது புயமாகிய தறியிலே பூட்ட என்க. வாரம் - மலைச்சார்பு. மலையின் அடிவாரத்திலே வளர்ந்துள்ள சந்தனமரங்களின் மணத்தோடு அளாவி. வயங்குதல் - விளங்குதல். ஈரம் - குளிர்ச்சி. சந்தனமணம் தோய்ந்து, தண்டமிழ் தோய்ந்து, ஈரந்தோயும் இளந்தென்றல். (11)

நீரி லேபுண்ட ரீக மரும்பு
  நிழலி லேகரு மேதி யுறங்கும்
வாரி லேவெண் டரள நிலாவும்
  வரம்பி லேசெந்நெற் பூங்குலை சாயும்
போரி லேநென் மணிக்குவை சேரும்
  பொறியி லேகரும் பாடுங் கரும்பின்
றாரி லேகம டங்கண் வளர்ந்திடு
  சோழ மண்டல நாடெங்க ணாடே.

புண்டரீகம் - தாமரை. மேதி - எருமை. வார் - முலைக்கச்சு. தாளம் - ஈண்டுத் தாளவடம். பூங்குலை - அழகிய குலை. போர் — நெற்போர். பொறி - ஆலை. தார் - அடி. கமடம் - ஆமை. (12)

மஞ்ச ளாவிய மாடங்க டோறும்
  மயில்கள் போன்மட வார்கணஞ் சூழு
மஞ்ச ரோருகப் பள்ளியில் வான்சிறை
  யன்ன வன்னக் குழாம்விளை யாடுந்
துஞ்சு மேதி சுருக்கலைச் சிறச்
  சுருக்க ளோடிப் பலாக்கனி கீறி
யிஞ்சி வேலியின் மஞ்சலிற் போய்விழு
  மீழ மண்டல நாடெங்க ணாடே.

மஞ்சு - மேகம். கணம் - கூட்டம். அம் - அழகு. சரோருகம் — தாமரை. வான்சிறை-பெருமை மிக்க சிறகு, சிறகுக்குப்பெருமை

யாவது மென்மை. அன்னவன்னக் குழாம் - வன்ன அன்னக் குழாம் எனக் கூட்டி நிறம் விளங்கிய அன்னத்தொகுதி என் றுரைக்க. இனிவான் சிறையையுடைய மடவாரன்ன அன்னக் குழாம் என்றலுமாம். துஞ்சுதல் - நிலைபெறுதல் 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' என்றாற்போல, இங்கு, நீர்நிலையிற் றங்குமென்க. இஞ்சி வேலியின் மஞ்சல் - இஞ்சியை வேலியாகவுடைய மஞ்சல்: இஞ்சியின் வேலியாகிய மஞ்சலென்றலுமாம். (13)

தண்ட பாணி யிறைஞ்சு பதாம்புயத்
 தாணு நாதன் றிகம்பரத் தூயன்
பண்டை நாகணை யானும் விரிஞ்சனும்
 பாதஞ் சென்னி யறியாத நம்ப
னண்டர் நாயகற் கற்புத மீதென
 வரிக ளோங்கிய வாலய வெற்பைத்
துண்ட வான்கழு கென்றும் வலம்வருஞ்
 சோழ மண்டல நாடெங்க ளூடே.

தண்டபாணி - முருகக்கடவுள்: அன்மொழித் தொகை. திகம்பரம் - திக்காடை. நாகணையான் - திருமால்: நாகம் - அம்முக்கெட்டு நின்றது. விரிஞ்சன் - பிரமதேவர். பாதம் சென்னி - நிரனிறையாகக்கொள்க. நம்பனாகிய அண்டர் நாயகன். அற்புதம் ஈது எனத் துண்டவான் கழுகு என்றும் வலம் வருமென்று கூட்டுக. அரிகள் - மூங்கில்கள்: சோலைகளு மாம். துண்டம் - மூக்கு: கழுகு நீண்ட மூக்குள்ளதாதலின் துண்டவான் கழுகு எனப்பட்டது. வான் - பெருமை. இது திருக்கழுக்குன்றத்தினைச் சிறப்பித்துக் கூறியவாறு. இத்தலம் தொண்டை நாட்டகத்ததேனும், அத்தொண்டைநாடு சோழ நாட்டின் ஒரு பகுதியாய்ச் சோழவரசனாற் றொண்டைமானிளந் திரையனுக்குக் கொடுக்கப்பட்டதே யாகலின், அதனைத் தொண்டை நாட்டுத் தலமென்னாது சோழநாட்டுத் தலமென்றார்.

அருவி யோதை யிழுமெனுங் குன்றி
லடைந்த சாரற் குளிர்புன மீதி
லுருவு சேர்தினைப் பூங்கதிர் மேற்கிளி
யோச்ச வேண்டிப் புலிநகத் தாலி
மருவு வண்குறப் பேதையர் கட்செவி
மாசு ணப்பண நேர்கவண்மீதி
லிருளி லாத மணிவைத் தெறிந்திடு
மீழ மண்டல நாடெங்க ளூடே.

ஓதை - ஓசை. இழுமெனல் - ஒலிக் குறிப்பு. சாரம் - மலைப்பக்கம். உருவு சேர்தல் - வடிவுமுற்றுப் பெறுதல்: அஃதாவது பயிர்முற்றி விளைதல். ஓச்சல் - ஓட்டுதல். புலி நகத்தாலி - குறப்பெண்கள் அணியும் ஆபரணம். கட்செவி - பாம்பு: கண்ணே செவியாகவுடையது. மாசுணப்பணம் - பெரும் பாம்பின்படம். கவண் - கிளிமுதலியவற்றைக் கடியுங் கருவி: தட்டை, குளிர், தழலை என்பன இதன் பேதங்கள். கவணில் மணிவைத் தெறிந்திடுமென்க. இருள் இலாத மணி - பிரகாசம் பொருந்திய இரத்தினங்கள். (15)

மாலை தோறு மிசைவன வண்டுமென்
மாலை நூலிடை யேயுந் துவண்டு
வேலை தோறும் பயில்வன சங்கம்
வியன்க ழகந்தொ றுந்தமிழ்ச் சங்க
மாலை தோறும் பொழிவன சாறுபொன்
னூன வீதி யரியான் சாறு
சோலை தோறு மலர்த்தா திறைத்திடுஞ்
சோழ மண்டல நாடெங்க ளூடே.

நூல் இடை - நூல் போன்ற இடை. இடை துவண்டு ஏயும். வேலை - கடல். சாறு - முன்னது கருப்பஞ்சாறு, பின்னது விழா. இது யமகம். (16)

### சிந்து

பைப்ப ணிப்பகு வாய்ப்பட்ட திங்களிற்
பாயு மோதக் கடற்கரை தோறு
மிப்பி வாயிலின் முத்த மிலங்கிய
வீழ மண்டல நாடெங்க ளுடே.

பை - பாம்பின் படம். பகுவாய் - பிளந்த வாய். திறந்தவா யென்றவாறு. திங்களின் - சந்திரன்போல. ஓதம் - அலை. இப்பியின்வாயில் இன் முத்தம் என்க. இன் முத்தம் - மெய்க்கு இனிதாம் முத்து. இது முதல் இருபத்து நான்கும் இரண்டடிச் சிந்துகள். (17)

மாரி மேகந் தவழ்மலைச் சாரலின்
மந்தி வைத்த மணிப்பத்ம ராகஞ்
சூரி யோதயம் போல விளங்கிய
சோழ மண்டல நாடெங்க ளுடே.

மாரி - நீர். மந்தி - பெண் குரங்கு. பத்மராகம் - ஒருவகை இரத்தினம். அதன் ஒளி சூரிய உதய ஒளிபோல விளங்கிய தென்க. (18)

பரப்பு மேகலை மங்கையர் போகம்
பயில வேண்டி யிணங்கார் முகத்தை
யிரப்ப தேயன்றி வேறிரப் பில்லாத
வீழ மண்டல நாடெங்க ளுடே.

மேகலை - அரைப்பட்டிகை. இணங்கார் - ஊடிய பெண்கள். இரத்தல் - யாசித்தல். இதுவும் மேல் வருவதும் பரிசங்கியாலங் காரம். (19)

வாம மேகலைப் பாவையர் கோவை
வதனம் போல விளங்கிய விண்ணிற்
சோமன் மேலன்றி யோர்மறு வில்லாத
சோழ மண்டல நாடெங்க ளுடே.

கோவை - உவமையாகுபெயராய் அதரத்தை உணர்த்திற்று. விளங்கிய சோமன். சோமன் - சந்திரன். (20)

வளமை சேர்ந்திடு மூப்பிய லான்முது
மந்தி தாவி மலையிடைப் பாய
விளமை மந்தி யுருவடி வாய்விடு
மீழ மண்டல நாடெங்க ளூடே.

மூப்பு இயல் - முதுமைத் தன்மை. உருவடிவு - அழகிய வடிவம். (21)

முன்னை நாளிற்பஞ் சானன ரூபன்
முளரி யந்தட மூழ்கிய போதிற்
சொன்ன மேனி விளங்கி யெழுந்திடு
சோழ மண்டல நாடெங்க ளூடே.

பஞ்சானனம் - சிங்கம்: பஞ்சம் - விரிவு, ஆனனம் - முகம்: விரிந்த முகத்தையுடையது என்பது உறுப்புப் பொருள். பஞ்சானனரூபனென்றது சிங்கவன்மனை. முளரி - தாமரை. தடமென்றது சிவகங்கைத் தீர்த்தத்தை. சொன்ன மேனி - பொன்மேனி. இவ்வரலாற்றைக் **கோயிற்புராணத்தில்** இரணிய வன்மச் சருக்கத்திற் காணலாம்.

அருளதனுற் றடம்படியு மவன்கடமே லருக்கனென
விரவுபசுங் கானடைந்த மேருகிரி யெனவிளங்கி
யிரணியமா முருவாகி யெழுந்ததுகண் டதிசயித்துப்
பரவியது பெயராக யாவர்களும் பயில்வித்தார்.

என்பது அத்திருவாக்கு. (22)

உரைத்த வானிந்து காந்தச் சிலைவிட்
டுருகு நீர்ப்பிர வாகங்க ளோடி
யிரைத்த வேலைப் புலால்வெடி மாற்றிடு
மீழ மண்டல நாடெங்க ளூடே.

உரைத்த - மேலாகச் சொல்லப்படும். வான் இந்து - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் சந்திரன். இந்து காந்தச்சிலை - சந்திரகாந்தக்கல். அது சந்திரன் வரவாற் புனல்பெருக்குவது. பிரவாகம் - வெள்ளம். இரைத்தவேலை-முழங்கும் கடல். புலால் வெடி - புலால் நாற்றம். (23)

பகுத்த வந்தணர் சாலைக டோறும்
பயிலும் வேதத் தொலிபண்ணை மீதிற்
றொகுத்த மள்ளர் குரவையை மாற்றிடு
சோழ மண்டல நாடெங்க ணுமே.

சாலை - ஈண்டு அத்தியயனஞ் செய்யுமிடம். பகுத்தசாலை - இஃது இருக்குவேதம் ஓதுமிடம், இஃது யசுர்வேதம் ஓதுமிடம் என்று இங்ஙனம் பகுக்கப்பட்ட சாலை. பண்ணை - வயல். தொகுத்த - கூடிய. குரவை யொலியினும் மறையொலி மிக்கதென்றவாறு. (24)

பண்ணிற் றோயப் பொருண்முடிப் புக்கட்டிப்
பாடும் பாவலர்க் கீந்திட வென்றே
யெண்ணிப் பொன்முடிப் புக்கட்டி வைத்திடு
மீழ மண்டல நாடெங்க ணுமே.

பண் - இசை. தோய்தல் - பொருந்துதல். பொருள் முடிப்புக்கட்டி - விஷயத் தொகுதியை அமைத்து. பொன் முடிப்பு - பொற்கிழி. (25)

செல்லுஞ் சென்முடிக் குந்தளக் கண்ணிரு
சேலைப் போன்ற கடைசியர் செய்க்குச்
சொல்லுஞ் சொன்முடிப் புக்கட்டி வைத்திடுஞ்
சோழ மண்டல நாடெங்க ணுமே.

செல்லும் செல் - (விண்ணில்) செல்லும் மேகம். மேகம் போன்ற முடியாகிய குந்தளம். முடி - ஐம்பாலிலொன்று. குந்தளம் - பெண்மயிர். குந்தளக் கடைசியரென முடிக்க. குந்தளத்

றையும் இரண்டு சேன்மீன்களைப் போன்ற கண்களையுமுடைய கடைசியர். செய் - வயல். சொல்லும் - புகழ்ந்து சொல்லப் படும். சொல் - நெற்பயிர். சொல்முடிப்பு - இங்கே நாற்றுமுடி.

காந்தி சேர்கண் ணிலாதவர்க் குக்கண்ணுங்
காட்சி யுந்தந்து சூர்ப்பகைச் செவ்வே
லேந்தல் சேர்கதி ராபுரி சேர்ந்திடு
மீழ மண்டல நாடெங்க ணாடே.

காந்தி - ஒளி. கண் - கண்ணிந்திரியம். காட்சி - அறிவு. சூர் - சூரபதுமன். சூர்ப்பகைச் செவ்வேல் ஏந்தல் - சூரனுக்குப் பகை வனாகிய முருகக்கடவுள். கதிராபுரி - கதிர்காமம். (27)

பொங்கு கூளி பிடித்தவர்க் குக்கூளி
போக்கி யிக்கலி மீதினிற் செவ்வேற்
றுங்க முத்தையன் வீற்றிருக் கும்புரிச்
சோழ மண்டல நாடெங்க ணாடே.

கூளி - பேய். இக்கலிமீதில் - இந்தக் கொடிய கலியுகத்தி லும். துங்கம் - பெருமை: வெற்றியுமாம். முத்தையன் - முத்துக் குமாரசுவாமி யென்னும் திருநாமம் பூண்ட முருகக்கடவுள். அப் பெருமான் வீற்றிருக்கும்புரி புள்ளிருக்குவேளூர் எனப்படும் வைத்தீசுரன்கோயில். (28)

கயல்வ ரைந்த துவசன் பணிநவ
கண்டி மன்னன் வரராச சிங்க
னியல்பு டன்றிருச் செங்கோ னடாத்திய
வீழ மண்டல நாடெங்க ணாடே.

துவசம் - கொடி. கயல்வரைந்த துவசன் - மீன் வடிவம் எழுதிய கொடியையுடைய பாண்டியன். பணி - வணங்கிய. நவ கண்டி - ஓரூர்: அஃதிக்காலத்துக் கண்டியென வழங்கப்படுவது. வர ராசசிங்கன் - அவ்வூரரசன் பெயர். (29)

நேரி யன்சரண் புக்க புறவி
னிறைத னக்கு நிறையிற் புகுந்த
சூரி யன்குடை நீழலிற் றங்கிய
சோழ மண்டல நாடெங்க ளூடே.

நேரியன் - சோழன்: நேரிமலை அவனதாகலான். நிறை யிரண்டனுள் முன்னது அளவு, பின்னது துலைத் தட்டு. சூரியன் - இங்குச் சிபிச்சக்கரவர்த்தியைக் குறித்தது: சோழவரசர்க் சூரிய பரம்பரையினராதலான், சிபிச்சோழன் சூரியனெனப்பட்டான். ()

கான்ற சோதியி னித்திலஞ் சிந்துங்
கரும்பி னிற்குருத் தைக்கதிர்க் கற்றை
யீன்ற சாலிக் குழாஞ்சுமந் தோங்கிடு
மீழ மண்டல நாடெங்க ளூடே.

கான்ற சோதியின் நித்திலம் - வெளிவிடும் பிரகாசத்தினை யுடைய முத்து. கதிர்க்கற்றை - கதிர்த்தொகுதி. சாலிக்குழாம் சுமந்தோங்குதலாவது கரும்பினது உயரம் வளர்ந்து நிற்றல். ()

சாதி நாகிளந் தெங்கினிற் சாய்ந்திடு
தண்கு ரும்பையைப் பூகத ராசிச்
சோதி யார்பவ ழக்குலை தாங்கிய
சோழ மண்டல நாடெங்க ளூடே.

சாதி - ஈண்டு உயர்வு. நாகிளமை - ஒரு பொருட் பன்மொழி: மிக்க இளமை யென்றவாறு. பூகதம் - கமுகு. ராசி - கூட்டம். பவழக்குலை - கமுகின் குலை பழுத்தவழிப் பவழநிறங்கோடலின் அவ்வாறு கூறினர். 'எண்ணார் முத்தமீன்று மரகதம்போற் காய்த்துக், கண்ணார் கமுகு பவழம் பழுக்குங் கலிக்காழி'-என்பது தமிழ்மறை. மேலதற்குரைத்தாங்குரைக்க. (32)

கற்ற நூலுணர் பண்டிதன் மார்பஞ்ச
காவி யஞ்சட் கலைக்கட ரேய்ந்து
மெற்றை நாளுங்கல் வித்திறம் பார்த்திடு
மீழ மண்டல நாடெங்க ளுடே.

கற்றலின் வேறு உணர்தலாதலின் 'கற்ற நூலுணர் பண்டி தன்மார்' எனப்பட்டது. 'ஓதியுணர்ந்தும்' எனத் தேவர் கூறிய தும் அது. மார் - பன்மை விகுதி. பஞ்சகாவியம் - தமிழிலேயுள்ள ஐம்பெருங் காப்பியங்கள். அவை சிந்தாமணி சிலப்பதிகார முதலியன. சட்கலை - ஆறுவகைக் கலைகள்: அவை நையாயிக முதலிய வடமொழிச் சாத்திரங்கள். எனவே, அப்பண்டிதர்கள் இருமொழியிலும் வல்லுநராதல் கூறப்பட்டது. எற்றைநாளுங் கல்வித்திறம் பார்த்தலாவது சாந்துணையுங் கற்றல். இதனை, "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன் சாந்துணையுங் கல்லாத வாறு" என்னுந் திருக்குறளாலறிக. (33)

திகந்த மெட்டும் வடகலை தென்கலை
தேர்ந்து தேர்ந்து செழுமலர்க் காவிற்
சுகந்த னக்கயற் பூவை பயிற்றிடு
சோழ மண்டல நாடெங்க ளுடே.

திக் அந்தம் - திக்கின் முடிவு. அதன்வரைப்பரவிய வடகலை தென்கலை. அடுக்கு, பலகாலுந் தேர்ந்தமை புணர்த்திற்று. சுகம் - கிளி. தனக்கு அயல்பூவை - தனக்குப் பக்கத்திலிருக்கும் நாகண வாய்ப்பறவை. 'கிள்ளை பாடுவ கேட்பன பூவையே' 'கிள்ளைகள் பாடமுரைப்பன கேட்பன மெய்ப்பூவை' என்பன பெரியார் திருவாக்குகள். (34)

ஆட்டு மூசலி னுடுமின் னார்பொன்
னணிக லத்தின் மணிதெறித் தோடி
யேட்டுக் காவிற் குயிற்றுயின் மாற்றிடு
மீழ மண்டல நாடெங்க ளுடே.

மின்னார் - பெண்கள். எடு - பூவிதழ். கா - சோலை. துயில் - தூக்கம். (35)

வாவி யின்கரைக் கெண்டை குதிக்க
மண்டு கம்பாய்ந்து செந்தா மரைப்பாயற்
றாவி யன்னத்தி னித்திரை மாற்றிடு
சோழ மண்டல நாடெங்க ளூடே.

வாவி - நீர் நிலை. மண்டுகம் - தவளை. கெண்டை குதித்தலின் மண்டுகம் பாய்ந்து அன்னத்தின் துயிலை நீக்குகின்றதென்க. தூவி - சிறை. (36)

கோல மாதவி வன்னி மராமரங்
கோங்கு வேங்கை செங்குங்கு மஞ்சாதி
யேல மார்கதிர்க் கற்றையை மாற்றிடு
மீழ மண்டல நாடெங்க ளூடே.

கோலமாதவி-அழகிய மாதவி; மாதவி-குருக்கத்தி விசேடம். ஆர்கதிர் - நிறைந்த கிரணம்; வினைத்தொகை. கதிர் - ஈண்டுச் சூரிய கிரணம். (37)

ஆலை தாதகி பொன்னிறக் கொன்றை
யரும்பு கூவிளம் பாதிரி புன்னைச்
சோலை வான முகிலைத் தரித்திடு
சோழ மண்டல நாடெங்க ளூடே.

ஆலை - கரும்பு. தாதகி - ஆத்தி. கூவிளம் - வில்வம். வான முகில் - வானத்திற் செல்லும் மேகம். (38)

கருவ லம்புரிச் செங்கதிர் மாவலி
கங்கை யாறு பெருகிக் கரையி
னிரும ருங்கினு முத்தங் கொழித்திடு
மீழ மண்டல நாடெங்க ளூடே.

கருமை - பெருமை. வலம்புரியின் செவ்வியகதிர்கள். மாவலி கங்கையென்பது யாற்றின் பெயர். முத்தம் கொழித்தல்-முத்துக் களை வீசுதல். (39)

வள்ளி யோரிற் கொடைநிறைந் தேநுரை
மண்டி யேவரு காவிரி யாறு
துள்ள வாளை பசும்பொ னிறைத்திடு
சோழ மண்டல நாடெங்க ளூடே.

வள்ளியோர் - வரையாது கொடுப்போர். இன் - ஐந்தனுருபு; ஒப்புப்பொருளில் வந்தது. வாளைமீன் துள்ளுமாறு காவிரியாறு பொன்னை வீசுகின்றதென்க. இத்துணையும் பள்ளியர் தம் நாட்டு வளங் கூறியவாறு. (40)

**வெண்பா**

ஔவியநெஞ் சொன்றுமின்றி யன்புபுரி பத்தர்வினைச்
செவ்வியகோ டைக்குநிழல் செய்யுமே—வைவேற்
றுதிசெய்குருந் துக்குத் துணையாம் பருளைப்
பதியொருகோட் டுக்கற் பகம்.

ஔவியம் - கோட்டம். அவ்வியநெஞ்சமென்பதற்குக் 'கோட்டம் பொருந்திய மனம்' என்றார் ஆசிரியர் பரிமேலழகரும். ஒன்றும் - சிறிதும். செவ்வியகோடை - மிக்க கோடை. துதிசெய் வைவேற் குருந்து என்க. குருந்து - சிலேடையால் மரவிசேடமும் குழந்தையுமாம்; குழந்தை ஈண்டு முருகக்கடவுள். ஒருகோடு - ஒற்றைக் கொம்பு. கற்பகம் - ஈண்டுப் பரஞ்சோதி விநாயகப்பிரானைக் குறித்து நின்றது. குருந்துக்குத் துணையாம் கற்பகம் கோடைக்கு நிழல் செய்யுமென்க. (41)

## குலமுறை கிளத்தல்

**சிந்து**

1. ஆதி காலத்தி லாருயிர் யாவு
மளித்த ளித்துத் துடைக்கும் பிராட்டி
பாதி யம்புலி வாணுதற் சத்திநாற்
பத்து முக்கோண சக்ரவி நோதி

2. தூய சோதிப் பனிவரைக் கொம்பெனுந்
தோகை தன்னை மணச்சாலை தன்னு
ளாய வேதப் பிதாமகன் பேணி
யமையு மோமச் சடங்கு புரிய

3. வென்றி சேர்வெள் ளூவாப்பிட ரேறிய
வேந்த னேமுத லெண்டிசை காப்போர்
மன்ற லூறுந் துழாய்மவு லிப்பணி
வயிரி யூர்ந்திடு வைகுண்ட நாதன்

4. எண்ணில் கோடி வயிரவர் சூழ்ந்திட
வெண்ணில் கோடி யுருத்திரர் சூழப்
பண்ண மைந்த பசும்பரி யேழுடைப்
பருதி வானவ ரும்வந்து சூழ

5. அண்ட பந்தி யெடுத்துக்கை யம்மானை
யாடு பூத கணங்க ளொருங்கப்
பண்டை யூழிக் கனல்விழிச் சோதிப்
பணக ளூடவிச் சேடனுஞ் சூழச்

6. சித்தர் சாரணர் சூழ்ந்திட நாரதன்
சேருந் தும்புரு யாழிசை பாடப்
பத்தி வாணன் குடமுழ வத்துடன்
பானு கம்பன் பணில முழக்கத்

7. தேரு நாமகள் சீர்த்தி யிசைக்கத்
திருமடந்தைநன் சேடியு மாக
வாரு லாவு குயத்தின் கவரியை
வந்து சேவித்துப் பக்கலி னிற்கும்

8. அமைய மூன்று மணிவரைக் கண்டத்
தலங்கு மங்கல நாணது பூட்டி
யிமய ராசன் புனல்வார்ப்ப மால்வரை
யீன்ற பாவை தனைக்கைப் பிடித்து

9. வேட்ட பின்கதி ராடகப் பூதர
வில்லி யும்வல்லி யும்முறை போதிற்
கோட்டு மாவும் பிடியும் புணர்ச்சியிற்
கூடி யேவிளை யாடுதல் கண்டு

10. சத்தி யுஞ்சிவ மும்பிடி யும்மத
தந்தி யாகப் புணர்ந்தவந் நாளின்
மத்த மாவத னத்துட ேனோங்கார
வண்ண மாய்வந்த ஞானக் குழவி

11. அன்னை தேவி மனோன்மனி கொங்கை
யமுத தாரை பருகிய நேசன்
முன்னர் நின்றிகல் சூரனை வென்ற
முருக வேட்குமுன் னாகிய தோன்றல்

12. தந்த தந்தை பரம னுகைத்திடு
தட்டு டைத்தடந் தேரச் சிறுத்தோன்
முந்த நெஞ்சி னெவர்நினைந் தாலு
முயன்று முன்னின்று காத்தரு ளெம்மான்

13. தூய மூவுல கும்புகழ் வீசித்
துதிக்கை வாய்ந்த துதிக்கையொன் றுள்ளான்
பாயுந் தானம் படைத்திடு காரணன்
பத்த ரானவர்க் கன்பு புரிவோன்

14. மார்பின் மூன்றணி நூல்புனை நாதன்
மழலைத் தும்பி குடைகொன்றைத் தாமன்
பார தக்கதை யைப்பொற் சிலம்பினிற்
பாணித் தந்தம் பறித்துப் பொறித்தோன்

15. செறியும் பஞ்ச தருநிழற் சுந்தரத்
தேவர் கோன்புரி பூசனைக் காகக்
குறுவன் பாணி கரகத்திற் பாணி
குவல யத்திற் பெருகிடச் செய்தோன்

16. மோது மோதப் பயோததி மீது
முடக்கு நெட்டெயிற் றுப்பணைச் சேக்கை
மாத வன்கொண்ட வன்பணிச் சாபத்தை
மாற்றி மேலும் வரந்தந்த வண்ணல்

17. பங்க யங்கனி மாதுளங் கும்பம்
பரப்பு நேமி கதாயுதஞ் சங்க
மங்கு சந்தனு வேந்திய பாணிய
ளுகு வாகன மூர்ந்திடு நேசன்

18. அந்த ரத்தரு ணேதயர் கோடி
யருக்கர் போல விளங்குசெம் மேனி
யெந்தை வான்சரற் காலத்துச் சந்திர
னென்னத் தோற்றும் வடிவமுங் கொண்டோன்

19. நாக கன்னியர் தான்ருெழு மைங்கர
ளுரு மெள்ளுண்டை மோதகஞ் சீனி
பாகு சர்க்கரை மாங்கனி யீங்கிவை
பார ணம்புரி யுந்தொந்தித் தந்தி

20. செருக்கு மூடிய ராவண வஞ்சனைச்
சேண்பு லத்தெறிந் தாடிய வீரன்
மருக்கு லாவுவெண் டாமரைப் பீடிகை
வாழுஞ் சோதி யடியார்க் கெளியோன்

21. மாறெ திர்ந்து பொருத கயமுக
வாள ரக்கனை விண்டலத் தேற்றித்
தேறு கொன்றை யுடன்வாகை வேய்ந்தவன்
சில்ல ரிக்கண்ணி வல்லபை பாகன்

22. மானஞ் சேர்விக்ர மாதித்த வேந்தன்
மதிக்க சித்திரைப் பள்ளியிற் சென்று
கானஞ் சேர்குழன் மாதை யகற்றுதி
நாளை யென்று கனவினிற் சொன்னேன்

23. ஆமை யேன மழுப்படைச் செங்கைய
ராகு ராமர் குறள்சிங்க மச்ச
நாம வேயனென் பானுற் பவித்தவ
னுபி யிற்புவ னம்பல பூத்தோன்

24. தண்ட நேமி தனுவொடு வாள்சங்கந்
தாங்கி வேலை யறிதுயில் செய்யுங்
கொண்டல் வண்ணன்பொன் னுலைப் பதியுறை
கோல நீல நெடுமான் மருகன்.

1. அளித்தல் - முன்னது படைத்தல்; பின்னது காத்தல். துடைத்தல் - அழித்தல். சிவபிரான் தன் சத்தியால் முத்தொழிலும் நடாத்தலின் இவ்வாறு கூறினர். பாதி அம்புலி வாள் நுதல்- அர்த்த சந்திரனையொத்த ஒளிபொருந்திய நெற்றி. அம்மையார் எழுந்தருளிய பீடங்களுள் நாற்பத்து முக்கோண சக்கரமும் ஒன்ருகலின் நாற்பத்து 'முக்கோண சக்ரவிநோதி' என்ருர்.

2. பனிவரைக் கொம்பு - இமாசலன் புத்திரி. தோகை - இருமடி ஆகுபெயராய் உமாதேவியை யுணர்த்திற்று. பிதாமகன்- பிரமன். ஓமச்சடங்கு - ஓமக்கிரியை.

3. வெள்ளுவா - (ஐராவதம் என்னும்) வெள்ளையானை. வேந்தன் இந்திரன். எண்டிசை காப்போர் - எட்டுத்திக்குப் பாலகர். அவராவார்: இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன். மன்றல் - வாசனை. பணிவயிரி- கருடன்; பணி - பாம்பு.

4. எண்ணில் - கணக்கில்லாத. கோடி - ஈண்டு ஓர் எண்ணைக் குறிக்காது பல என்னும் பொருண்மேல் நின்றது. பசும்பரி- பச்சைக்குதிரை. 'பருதி வானவர்' என்றது பன்னிரு சூரியர்களை.

5. அண்டபந்தி - அண்டங்களின் வரிசை. அம்மானை - அம்மனைக் காய். ஆதிசேடன் ஆயிரம்பட முடிகளை யுடையவனுதலின், 'பணகணுடவிச் சேடன்' என்ருர். பணகண + அடவி= பணகணுடவி; இது வடமொழித் தீர்க்கசந்தி. பணகணம் - பாம்பின் படக்கூட்டம். அடவி - காடு; ஈண்டு மிகுதி மேற்று.

6. வாணன் - வாணசுரன். இவன் சிவபெருமான் சந்நிதியில் தன் ஆயிரங் கைகளாலும் குடமுழா முழக்குவிப்பவன். பானுகம்பன் - பூதகணத் தலைவருள் ஒருவன்; ஆயிரஞ் சிரங்களையுடையவன். கைலையங்கிரியில் தன்னுயிர வாய்களாலும் சங்கத்தொனி செய்பவன்.

7. நாமகள் - சரசுவதி. திருமடந்தை - இலக்குமி, கவுரி - உமாதேவி,

8. மூன்று மணிவரை - மூன்று அழகிய இரேகை. மங்கல நாண் - தாலிச் சரடு. புனல்வார்ப்ப - நீர் வார்க்க. மால்வரையீன்ற பாவைதனை - மலையரையன் பெற்ற உமாதேவியை,

9. வேட்டபின் - மணஞ் செய்துகொண்ட பிறகு. ஆடகப் பூதரவில்லி - பொன்மலையாகிய வில்லையுடைய சிவபெருமான். உறைபோதில் - (கைலாயத்தில்) எழுந்தருளி யிருக்குங்காலத்தில். கோட்டு மா - கொம்பையுடைய ஆண் யானை. பிடி - பெண்யானை.

10. மததந்தி - மதம்பொருந்திய ஆண் யானை. மா வதனம் - யானை முகம். ஓங்காரம் - பிரணவம். ஞானக்குழவி - ஞானமே திருமேனியாகவுடைய குழந்தை (விநாயகன்).

11. மனோன்மணி - உமாதேவி. கொங்கை யமுததாரை - முலைப்பாலொழுக்கு.

12. தந்தை பரமன் - தந்தையாகிய சிவபிரான். உகைத்தல் - செலுத்துதல். திரிபுரசங்கார காலத்தில் சிவபெருமானது பூமியாகிய தேரின் அச்சை யிறுத்தவர் விநாயகராதலின் அவரைத் 'தேரச்சிறுத்தோன்' என்றார். சிவபெருமான் திரிபுர தகனஞ் செய்யும் பொருட்டுத் தேவர்கள் சமைத்த தேரில் எழுந்தருளும் போது அத்தேவர்கள் விநாயகரை நினையாத காரணத்தால் தேரின் அச்சு இற்றது என்னும் விநாயக புராணம்.

13. துதிக்கை - முன்னது துதித்தல்; பின்னது தும்பிக்கை: தானம் - மதஜலம்; போக்குரை - கொடை.

14. தும்பி - வண்டு. கொன்றைத்தாமன் - கொன்றை மாலையை யணிந்தவன் (விநாயகன்). பொற்சிலம்பு - மேருமலை,

பாணி - (தன்) கையால். பறித்து - பிடுங்கி. பொறித்தோன் - எழுதினேன். விநாயகர் தம் கொம்பை முறித்தது கஜமுகனைக் கொல்லும் பொருட்டேயன்றிப் பாரதம் எழுதும் பொருட்டும் முறித்தனர் என்பது சரித்திரம். அதனை

"முனிராசன் மாபாரதஞ் சொன்னநாள்
ஏடாக மாமேரு வெற்பாக வங்கூர் எழுத்தாணிதன்
கோடாக வெழுதும்பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ"

என்பதனானுமுணர்க.

15. பஞ்சதரு - தெய்வ லோகத்திலுள்ள ஐந்து விருட்சங்கள். அவை: அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன. தேவர்கோன் - இந்திரன். குறுவன் - அகத்தியன். பண்படியாகப் பிறந்த பெயர்; குறுமை பகுதி. பாணிகரகத்தில் - கையிலுள்ள கமண்டலத்தில்: நிலை மொழியும் வருமொழியும் வட சொற்களாதலின் இயல்பாயிற்று. பாணி - முன்னது கை; பின்னது நீர். குவலம் - பூமி. சீர்காழியில் இந்திரன் வைத்த நந்தவனத்தின் பொருட்டு அகத்தியர் கமண்டலத்திலுள்ள நீரை, விநாயகர் காக வடிவமாய்ச் சென்று கவிழ்த்தனர் என்பது புராண வரலாறு.

16. ஓதம் - குளிர்ச்சி. பயோததி - பாற்கடல். முடக்கு நெட்டெயிற்றுப் பணைச்சேக்கை என்றது ஆதிசேடனை. எயிறு - பற்கள். பணை - பருமை. சேக்கை - படுக்கை. மாதவன் - திருமால். பணி - பாம்பு. பார்வதி தேவியார் இட்ட சாபத்தால் பாம்பின் வடிவுபெற்ற திருமால் விநாயகரைப் பூசித்து அச்சாபத்தையொழித்துக்கொண்டனர் என்பது விநாயகபுராண வரலாறு.

17. பங்கயம் - தாமரைப் பூ. கனி மாதுளம் - மாதுளங்கனி. கும்பம் - கலசம். நேமி - சக்கரம், கதாயுதம் - கதை. சங்கம் - சங்கு. அங்குசம் - தோட்டி. தனு - வில். ஆகுவாகனம் - பெருச்சாளி வாகனம்.

18. அருணோதயர் - சூரியோதயமாதற்கு முன்தோன்றுபவர்: இவர் செந்நிறமுடையவர். சரற்காலம் - மாரிகாலம்; (ஐப்பசி கார்த்திகையின் பருவம்). விநாயகப்பெருமானார் தம்

அடியார் முன் பவள நிறத்தராயும் பால் வண்ண நிறத்தராயும் தோன்றுவரென்ப. திருவலஞ்சுழியிலுள்ள விநாயகருக்கு வெள்ளை விநாயகரென்று பெயர்.

19. பாரணம் - உண்ணுதல். தொந்தி - வயிறு.

20. சேண்புலத்து - ஆகாயத்தினிடத்து. கோகர்ணம் என்னுந் திருப்பதியில், இராவணன் கைலையினின்றும் கொணர்ந்த சிவலிங்கத்தின் பொருட்டு, அவனை, விநாயகப்பெருமான் செண்டு போல் ஆகாயத்தில் எடுத்து எறிந்தனர் என்பது புராண வரலாறு. 'மருக்குலாவு வெண்டாமரைப் பீடிகை வாழுஞ் சோதி' என விநாயகரைச் சிறப்பித்தமையால் அவருக்கு வெண்டாமரை ஆசனமும் உண்டென்பது போதரும்.

21. வாகை - வெற்றிமாலை. அரி - செவ்வரி, கருவரி. வல்லபை பாகன் - வல்லபை என்னும் சத்தியை ஒரு மருங்கில் வைத்துக் கொண்டிருப்பவன்.

22. மாது - விக்கிரமாதித்தன் மனைவியாகிய இலக்கணசுந்தரி. இவள் விநாயக விரதம் நோற்றமையால், தான் இழந்த பதவியை மீண்டும் பெற்றாள். இக்கதையின் விரிவை விநாயக புராணத்திற்காண்க.

23. ஆமை - கூர்மாவதாரம். ஏனம் - பன்றி (வராகாவதாரம்). மழுப்படைச் செங்கையர் - பரசுராமர். ரகுராமர் என்பது ராகுராமர் என நீட்டல் விகாரம் பெற்றது. நாமம் - கீர்த்தி. வேயன் ஒன்பானுற்ப வித்தவன் - புள்ளாங் குழலுடைய வனாகிய ஒன்பதாவது அவதாரமாக வந்த கிருஷ்ணன். புவனம் பல பூத்தோன் - பிரமன்.

24. குறள் - வாமனன். கொண்டல் வண்ணன்-திருமால். பொன்னாலைப்பதி - யாழ்ப்பாணத்திலுள்ள ஒரு வைணவத் திருப்பதி. பார்வதி தேவியார், திருமாலுக்குத் தங்கை முறையாதலின் அவர் மூத்த பிள்ளையாகிய விநாயகனைத் 'திருமாலின் மருகன்' என்றார்.

### கொச்சகம்

வேட்டுவன்வா யுண்டுமிழ்ந்த மிச்சிலுவந் தான்புதல்வன்
தோட்டுவளஞ் சூழும் சுழிபுரத்தி லானைமுக
னூட்டுவளம் பேசியபுன் நவ்விவிழிக் கொம்பனையார்
கோட்டுநனை மாவின் குயிலிசையைக் கேட்டாரே.

வேட்டுவன் - கண்ணப்ப நாயனார். மிச்சில் உவந்தான் - எச்சிலாகிய இறைச்சியை உண்டு மகிழ்ந்தவன் (சிவபிரான்). தோடு - இதழ்; ஆகுபெயராய்ச் சோலையை யுணர்த்திற்று, நவ்வி விழி - மான்போன்ற கண். மா - மாமரம். (43)

### குயில் கூவுதல்

ஆனே றுயர்த்தகொடி யந்தண னுவந்ததிரு
வாலயம் விளங்கவே கூவாய் குயிலே.

ஆனேறு உயர்த்த கொடி - இருஷபக்கொடி. அந்தணன் - சிவபிரான். "கொந்தணவும் பொழிற்சோலைக் கூங்குயிலே யிது கேணீ, அந்தணனாகி வந்திங்கே யழகிய சேவடி காட்டி" என்பது திருவாசகம்.

தேனே றுகொன்றை யணிசிவனெழுத் தஞ்சுமே
செகமீதி னிலைபெறக் கூவாய் குயிலே.

எழுத்தஞ்சு - பஞ்சாக்கரம். (45)

மீனேறு கடலால போசனன் பரியான
வேதந் தழைத்திடக் கூவாய் குயிலே.

ஆலபோசனன் - விஷமாகிய உணவையுண்டவன் (சிவ பிரான்). "ஆலந் தானுகந் தமுது செய்தானை" என்னும் தேவாரத்தை நோக்குக. பரியான வேதம் - வேதக் குதிரை. (46)

மானேறு வரிநயன மங்கையொரு பங்கனார்
வாழ்சமய மெய்யென்று கூவாய் குயிலே.

மான் ஏறு - கலைமான். ஏறு - உவம வாசகமுமாம். நயனம்-கண். மங்கை - உமாதேவி. சமயம் - சைவசமயம். (47)

பூரிவரை மேலா ரணப்போலி யதனைப்
பொறித்தபெரு மானென்று கூவாய் குயிலே.

பூரிவரை - மேருமலை. ஆரணப்போலி - ஐந்தாம் வேத மென்று சொல்லப்படும் பாரதம். பெருமான் - விநாயகன். (48)

பேரியென மாலொலி முழங்கிமைய பூதரப்
பிடிதந்த களிறென்று கூவாய் குயிலே.

மால் - மேகம். பூதரப்பிடி - பார்வதி. களிறு - ஆண்யானை (விநாயகன்). (49)

மாரனை யளித்தகண்ணன் புயங்கப் படிவ
மாற்றுபெரு மானென்று கூவாய் குயிலே.

மாரன் - மன்மதன். கண்ணன் - கரிய நிறத்தையுடைய திருமால். கண்ணன் என்பது பாகதச் சிதைவு. புயங்கம் வடிவு-பாம்பு வடிவு. (50)

ஆரமணி யாலைவயல் சூழ்தென்ப ருளையுறை
யைங்கரனை வாழ்த்தியே கூவாய் குயிலே.

ஆரமணி - முத்துமணி. ஆலை - கரும்பு; ஆகுபெயர். ஐங்கரன்-விநாயகன். (51)

ஆயிரம்பகு வாயனந்தனின் வீறுகண்டுயில் வாரிருந்தபொன்
னலையம்பதி வாழவே கூவாய் குயிலே.

அனந்தன் - ஆதிசேடன். வீறு - மற்றொருவருக்கில்லாத சிறப்பு. கண்டுயில்வார் - யோக நித்திரை செய்பவராகிய திருமால். பொன்னலை - புன்னலைப்பதி. (52)

கோயிலின்னதி காரமன்றென வீசனன்புறு மாதொடொன்
கோணயங்கிரி வாழவே கூவாய் குயிலே. [றிய

அதிகாரமன்று - அதிகார சபை. கோணயங்கிரி - திரிகோண மலை. இது தேவாரம் பெற்ற ஈழநாட்டுத் தலங்களுளொன்று. ()

ஆயிசுந்தரி சேயர்நன்குடி லேசர்மின்மொழி வேலர்தண்கதி
ராபுரந்தனில் வாழவே கூவாய் கூயிலே.

ஆயி - தாய். சுந்தரி சேயர் - உமாதேவி புத்திரர் (முருகர்). நன்குடிலேசர் - நன்றாகப் பிரணவத்தை யுபதேசித்தவர். கதிரா புரம் - கதிர்காமம். (54)

ஆயிரங்கலை யாயுமண்டல வேதபண்டித ராயவந்தணர்
தேரும் விஞ்சையின் மீறவே கூவாய் குயிலே.

ஆயிரங்கலை வேதத்தின் உட்பிரிவை யுணர்த்திற்று. "சாகைமாயிர முடையார்" என்பது **தமிழ்மறை**. (55)

அரந்தோயு மயில்விழிகொள் சிவன்பாதி யுமைபுதல்வ
னயன்பேணு பரமனென்று கூவாய் குயிலே.

அயில்விழி - வேல்போன்ற கண்கள். அயன் - பிரமன். பரமன் - முருகன். (56)

இரங்காழி புடைவளையும் நிலங்கீறி யுழுதசம
ரிளங்கேழல் மருகனென்று கூவாய் குயிலே.

கேழல் - திருமாலாகிய பன்றி. (57)

உரந்தாவு தசமகுட தரன்சாய விசையினெறிந்
துகந்தாடு பெரியனென்று கூவாய் குயிலே.

தசமகுடதரன் - பத்து மகுடங்களை யுடையனாகிய இராவணன். உகந்து - மகிழ்ந்து. பெரியன் - விநாயகன். (58)

பரங்காண நொடியில்வினை தவிர்ந்தோட வுலவுமொரு
பரஞ்சோதி யிறைவனென்று கூவாய் குயிலே.

பரங்காரண - பரம்பொருளாகியதன்னைத் தரிசிக்க. பரஞ் சோதியிறைவன் - விநாயகர். (59)

வரிசைவளர் திரிபதகை மரபினுரி யவர்கிளைகண்
மதிசெல்வ மேறவே கூவாய் குயிலே.

திரிபதகை மரபினுரியவர் - கங்கை குலத்தவர் (வேளாளர்). திரிபதகை - கங்கை. கிளைகள் - உறவினர். மதிசெல்வம் - மதிக்கின்றசெல்வம்; வினைத்தொகை. (60)

பரிசகல கலைநிபுண னதிபரத விதநுரிய
பரிநகுல னிவனென்று கூவாய் குயிலே.

பரிசகலகலை - குதிரை லட்சணத்தை யறியும் சகல சாஸ்திரம். அதி - அதிகமான. பரதம் - நடன சாத்திரம். பரிநகுலன் - அசுவ இலட்சணத்தை முற்றும் உணர்ந்தவனான நகுலன்: இவன் என்று - விசய ரகுநாயகனென்று. (61)

விரியமுத முறுமகுட மருவுமணி முகுடமுலை
மின்னார். விகாரனென்று கூவாய் குயிலே.

முகுடம் - கிரீடத்தை யொத்த. மின்னார் - பெண்களை, விகாரனென்று - விகாரப்படுத்தத் தக்கவனென்று; (விசய ரகுநாயகன்). (62)

தரியலர்கண் மௌலிகுனி விசயரகு நாயகன்
சகமதனில் வாழவே கூவாய் குயிலே.

தரியலர்கள் - பகைவர்கள். (63)

## கழிக்கரைப் புலம்பல்

விரைமலர் மேலறு காலிசை கானிசை மேவுபருளையில்வாழ்
வரைகிழி வேலவ னினிய சகோதர மதகய மாமுகனார்
கரையொலி வார்கட லேதிரை யேசுற வேகழி யேகயலே
யுரைமது நீண்மழை யேமய லோபெரி தோதரி தோதரிதே.

### [தலைவன் பொருள் வயின் பிரிவில் தலைவி யிரங்கல்]

அறுகால் - வண்டு. திரையே - அலையே! சுறவே - சுறா மீனே! மயலோ பெரிது - மயக்கமோ பெரிது. ஓதரிது ஓதரிது -

சொல்லமுடியாது. அடுக்கு அவலத்தின் கண் வந்தது ஓத அரிது என்பது ஓதரிது என அகரந்தொக்குநின்றது. (64)

## மழைகேட்டல்

### கொச்சகம்

இருநிலத்து வேதியரும் ஏருழுவே ளாளர்களும்
பரிவினுடன் கடல்வருண பகவானைக் கண்டிறைஞ்சி
விரிதிரைநீர் வளம்பெருக மேவுமுயிர்ப் பயிர்தழையத்
தருமமொடு தரைவிளங்கத் தந்தருளீர் மழையையென்றார்.

இருநிலத்து - பெரிய வுலகத்தில். பரிவினுடன் - அன்புடன்: இன் - சாரியை. வருண பகவானை - வருண தேவனை. நீர்வளம் பெருகவும், உயிர்ப் பயிர் தழையவும், தருமங்களோடு உலகம் விளங்கவும் மழையைத் தந்தருளீர் என்றார் என்க. உயிர் பயிர் - உயிர்களாகியபயிர் எனவும் உயிர்கட்கு ஆதாரமாகவுள்ள பயிர் எனவும் கொள்க. (65)

என்பனசொற் செவிப்புகுத இயல்வருண னேதுசொல்வான்
பொன்பயிலுஞ் சீவனுமம் புவிமகனும் வக்கரித்தார்
வன்படைவாள் வலியசுர மந்திரியுந் தெற்கடைந்தான்
நன்பயன்மா மழைகேட்டீர் நாமினியெவ் வாறளிப்போம்.

பொன் பயிலும் சீவன் - பொன் என்னும் பெயர் பெற்ற வியாழன். வியாழனுக்குப் பொன் எனவும் சீவன் எனவும் பெயர் உண்டு. "தீதிலாத் தெய்வ மந்திரி யமைச்சன் சிகண்டிகன் இரணியன் வேந்தன், கோதிலான் வளப்பா னந்தணன் மறை யோன் குருபொன்னன்றமனியன் சீவன், வேதனல் வியாழப் பெயர்" (சாதக சிந்தாமணி - காலநிகண்டு) என்பதனானுமுணர்க. புவிமகன் - அங்காரகன். அசுரமந்திரி - சுக்கிரன். வியாழனும் அங்காரகனும் வக்கரித்தலும், சுக்கிரன் தெற்கடைதலும் மழையில்லாமைக்கு அறிகுறியாம். இதனை,

"வசையில்புகழ் வயங்குவெண்மீன், றிசைதிரிந்து தெற்கேகினுந்
தற்பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி
வான்பொய்ப்பினுந் தான்பொய்யா, மலைத்தலைய கடற்காவிரி"
**—பட்டினப்பாலை.**

என்றதானு முணர்க. (66)

ஆனுனு மோர்மதியிங் கறைந்திடுவ னீர்கேண்மின்
தேனூரு மலர்ச்சோலை செழித்தசுழி புரநகரிற்
கானார்மும் மதமழைபெய் கணபதியைக் கைதொழுதால்
வானூரு மழைபொழிய வரந்தருமென் றனுப்பினனே.

ஓர் மதி - ஒரு புத்தி. கான் - வாசனை. விநாயகருக்கு யானை முகமாதலால் இருமதமேயாயினும் மிகுதிநோக்கி மும்மதமென்றார்; அன்றியும், இச்சாஞான கிரியைகளையே மும்மதமாக வுடையவராதலால், 'மும்மத மழைபெய் கணபதி' என்றார். "ஒரு கோட்ட னிருசெவியன் மும்மதத்த னால்வாயைங் கரத்தன்" என்றார் பெரியாரும். (67)

எண்ணிவிடை கொண்டருளு மிருபிறப்பா ளரைமுதலோர்
திண்ணமென நினைந்துகொண்டு திருவாய்த்த சுழிபுரத்தில்
அண்ணல்பரஞ் சோதிவிநா யகனைவலம் வந்திறைஞ்சிப்
புண்ணியரே யாங்களுய்யப் புனன்மழைநீர் தருகிரென்றார்.

இருபிறப்பாளரை முதலோர் - அந்தணரை முதன்மையாகக் கொண்ட வேளாளர். (68)

செப்புமொழி தனிவினவிச் செம்பவள மணிமேனிக்
கைப்பனையைங் கரஞானக் களிறுசுழி புரநகர்வாழ்
பைப்பணிகங் கணம்பூண்ட பரஞ்சோதி யருட்கடவுள்
மைப்பருவ முகின்மாரி வழங்கமனத் திரங்கியதே.

கைப்பனை - பனைமரத்தை யொத்த துதிக்கை. பணி கங்கணம் - சர்ப்ப கங்கணம். முகில் - மேகம். பரஞ்சோதி யருட்கடவுள் - விநாயகர். இரங்கியது - இரக்கங் கொண்டது. (69)

### சந்தவிருத்தம்

செருகிய தவளக் கணமுகி றமரத்
திரைகடல் சுழியப் புனல்பருகா
பொருசிலை பயிலச் சிறைவிசை யுவணப்
புணைதுள வரியொத் தொளிகருகா
தருமொலி குமுறச் சுழிபுர நகரிற்
சகமகிழ் வரதக் கணபதியேர்
இருநுத லணிபட் டமதென மின்னி
யெழுந்திசை யெங்கணு மண்டியதே.

தமரம் - ஓசை. பருகா - பருகி. பொரு சிலை - பொருகின்ற வில்; ஈண்டு இந்திரதனுசு. உவணம் - கருடன். அரி - திருமால். சகம் - உலகம். மண்டி எழுந்தது - நெருங்கி எழுந்தது. மண்டியது என்புழியுள்ள விகுதியை எழும் என்பதனோடு இயைத்துப் பொருள் கூறப்பட்டது. ஏர் - அழகு. (70)

கருமயி லாடக் குயிலினம் வாடக்
கவியின மோடக் கரடிபுல்வாய்
பொருபுலி யாளித் திரள்மரை சாரற்
புறமுழை பதறிக் கிடுகிடவே
யருகுழை தவளக் குலமலை தகரத்
தடதிகி ரியின்முத் துதிர்தரவே
சொரிமல ரகிலப் பலமர முறியச்
சோவென மாரி பொழிந்ததுவே.

கார் காலத்தில் மயில் மகிழ்தலும் குயில் வாடுதலும் மரபாதலின், 'கருமயி லாடக் குயிலினம் வாட' என்றார். கவியினம் - குரங்குக்கூட்டம். புல்வாய் - மான். கிடுகிட - நடுங்க. திகிரி - மூங்கில். அகிலப்பலமரம் - பல அகில் மரம்; அ - சாரியை. சோவென - ஒலிக்குறிப்பு. முழை - குகை. (71)

வெருண்டு வரியுடல் சுருண்டு துயில்புரி
விடங்கொ ளுரகமு நடுங்கவே
உருண்டு நிலமிசை புரண்டு நடைமலை
யுடைந்து விதலையொ டொடுங்கவே
மருண்டு குழியத ரிடங்கர் நெளிதர
வரம்பில் வனசரர் கலங்கவே
இருண்டு புவிமயில் கிழிந்து விடநிரை
யெழுந்து கனமழை பொழிந்ததே.

உரகம்-பாம்பு. நடமலை-யானை. விதலை-நடுக்கம். குழியதர்-குழிந்த இடங்கள். இடங்கர்-முதலை. வனசரர்-வேடர். புவிமயில்-பூமிதேவி. நிரையெழுந்து - வரிசையாக எழுந்து. (72)

பணபதி சிரமிசை நிலவிய புகழ்பொலி
படிமக ளுதவிய திருமருமான்
மணமலி குவளைய மலர்செறி தொடையணி
வடகுவ டணபுய வலிமையினன்
இணரவிழ் சிகழிகை வனிதையர் தினமட
லெழுதிய தனுமத னனையனையான்
குணதர வரகு நாயக மகிபதி
கொடையென மாரி பொழிந்ததுவே.

பணபதி - ஆதிசேடன், படிமகள் - பூமிதேவி. மருமான் வழித்தோன்றல். குவளையமலர் என்புழி அ-சாரியை. வடகுவடு-மேருமலை, இணர்-பூங்கொத்து. சிகழிகை-பூமாலை. தனுமதனனை-வில்லேந்திய மன்மதனை. (73)

## ஆற்றுவரத்து

### சிந்து

பொருவில் கோணச் சிகரத் தருகிற்
பொழிந்த வெள்ளம் வழிந்துபோய்ப்
பூந்தண் குறிஞ்சி வளைந்து வேடிச்சி
காந்தன் சேவடி வணங்கியே

குருளை கோளரி வேழக் களபம்
குருட்டு மாசுண முருட்டியே
குறவர் குடிலுஞ் சிலையு மிதணுங்
கொண்டு பாலை யடைந்துமேற்
பருதி நயனச் சூலக் காளி
பாதம் பணிந்து கழுகுடன்
பருந்து நடுங்கக் குரவின் வேரைப்
பறித்து முல்லை யடைந்துபூந்
திருவின் கொழுநன் சரணம் வணங்கித்
தேங்கு மாயர் பாடியைத்
தேடி வெண்டயிர்ச் சாடி சாடிச்
சிறந்த மருதம் புகுந்ததே.

வெள்ளம் குறிஞ்சியிற் சென்று பாலையை யடைந்து பின்னர் முல்லையைச் சார்ந்து மருதம் புக்கதென்பதை இச்செய்யுள் கூறிற்று. கோணச் சிகரம் - திரிகோண மலையின் உச்சி. வேடிச்சி காந்தன் - வள்ளி நாயகிக்குக் கணவனாகிய முருகவேள். இவர் குறிஞ்சிநிலக் கடவுள். கோளரிக்குருளை - சிங்கக்குட்டி. குருளைக் கோளரி என்பது சந்தவின்ப நோக்கி இயல்பாய் நின்றது; முன் பின்னாகவந்த ஆறும் வேற்றுமைத் தொகை. வேழக்களபம் - யானைக்கன்று. மாசுணம் - மலைப்பாம்பு. குடில் - குடிசை. சிலை - வில். இதண் - பரண். பருதி நயனம் - வட்டமான கண். காளி - பாலைநிலத் தெய்வம். கழுகு, பருந்து - பாலை நிலப்பறவைகள். குரவு - குரா மரம்; இதுவும் அந்நிலக் கருப்பொருள். திருவின் கொழுநன் - இலக்குமி காந்தனாகிய திருமால்; இவர் முல்லை நிலக்கடவுள். ஆயர்பாடி - இடையர் சேரி. சாடி - முன்னது பாண்டம்; பின்னது மோதி. (74)

வாய்ந்த மருத நிலத்திற் புகுந்து
வயங்கு கஞ்சதம் பத்தினன்
வயிரம் பிடித்த வெள்ளை வாரணன்
வனசத் தாளை வணங்கியே

சேந்த பதுமங் குவளை களைந்து
தேக்கிக் காஞ்சியைத் தாக்கியே
செந்நெற் குலமும் வெண்ணெற் குலமுஞ்
சேர்த்து நெய்த னிலத்திற்போய்
ஆய்ந்த வருணன் சரணம் வணங்கி
யடம்பங் கொடியைப் பிடுங்கியே
அடிகோண் முண்டகந் தடவு கடலை
யடையப் பறித்துப் பவளமுந்
தோய்ந்த நித்திலக் குவையும் வாரிச்
சுறவுக் குலங்கள் பதறவே
சுழித்துத் திரட்டி வெருட்டி யுருட்டித்
துள்ளி வெள்ளம் பரந்ததே.

கண் சதம் பத்தினன் - ஆயிரங் கண்ணனாகிய இந்திரன்; இவன் மருத நிலக்கடவுள். வயிரம் பிடித்த - வச்சிராயுதத்தைத் தாங்கிய. வெள்ளை வாரணன் - வெள்ளையானையாகிய ஐராவதத்தை யுடையவன். சேந்த - சிவந்த. காஞ்சி - காஞ்சி விருட்சம். இது மருதநிலக் கருப்பொருள். வெண்ணெல் - சம்பாநெல். வருணன் - வருணபகவான்; இவன் நெய்தனிலக் கடவுள். அடம்பங்கொடி - கொடி விசேடம்; முண்டகம் - தாழை; இவ்விரண்டும் நெய்தனிலக் கருப்பொருள்கள். பரந்தது - (கடலிற்) பரவியது.

குறவை வாளை யுளுவை மயிந்தன்
குப்பு ளாவுடன் திருக்கைமீன்
கொழுத்த மடவை தொகுத்த கிளி
குமிளா மாசினி செங்கண்ணன்
உறுகி ழாத்தி காலை பாலை
யோங்கு திரளி வச்சிர
மூட கத்துடன் சூடை செப்பலி
யுற்ற நெடுவா ளூடகம்

பறவை யுறவி குளக்கன் றோகைப்
பருந்து வாயன் மட்டிமீன்
பாரக் கெண்டை தடியன் சீலா
பாரக் கத்தலை யாரல்மீன்
கறுவிக் கரையில் வளைகளை தூக்கிக்
கதித்துக் குதித்துப் பாயவே
கங்கை யாறு பெருகி வார
காட்சி பாரும் பள்ளீரே.

இச்செய்யுளும், அடுத்த இரண்டு செய்யுட்களும் மீன் வகைகளைக் கூறுகின்றன. மயிந்தன், குப்புளா, கீளி, குமிளா, மாசினி, செங்கண்ணன், கிழாத்தி, காலை, பாலை, திரளி, வச்சிரமூடகம், சூடை, செப்பலி, நெடுவாலூடகம், பறவை, உறவி, குளக்கன் றோகை, பருந்துவாயன், மட்டிமீன், கெண்டை, தடியன், சீலா, கத்தலையாரல்மீன் இவைகள் மீனின் பேதங்கள். வளை - சுரபன்னை; இது நெய்தனிலக் கருப்பொருள். வார காட்சி - வருகின்ற காட்சியை; வருகிற என்னுஞ் சொல்லின் மரூஉ. (75)

தாவு கெளிறு வாரா லாரல்
தகுவெள் ளாரல் தும்பையன்
சாளு மாம்பழக் கெளிறு சின்னத்
தரளங் கறுத்த கெளிற்றுமீன்
வாவு கருங்கண் வாளை பவள
வாளை மூக்கன் வாளைகோ
வஞ்சி கடியன் பொதியன் கெளிறு
வவ்வால் வெள்ளை வவ்வால்மீன்
ஒலி னெடிய வாயன் மடவை
யுரிய மணலைக் கூரலோ
டோடும் பூனைக்கண் கெளிறு வயலி
னுதிக்குங் காணி யாளனும்

பூவின் றடத்தில் வயலிற் பாயப்
புறத்துப் பாயப் பாயவே
பொருது மாவ லிகங்கை வார
புதுமை பாரும் பள்ளீரே.

கெளிறு, வாரால், ஆரல், வெள்ளாரல், தும்பையன், மாம் பழக்கெளிறு, சின்னத்தரளம், கறுத்த கெளிற்று மீன் (கருங் கெளிறு), கருங்கண்வாளை, பவளவாளை, மூக்கன்வாளை, கோவஞ்சி, கடியன், பொதியன் கெளிறு, வவ்வால், வெள்ளை வவ்வால்மீன், நெடியவாயன், மடவை, மணலை, கூரல், பூனைக்கண் கெளிறு, காணியாளன் இவை மீன் வகைகள். மாவலி கங்கை - பருளை நகரத்திற் பாயும் நதியின் பெயர். வார புதுமை என்பதற்கு முன்னுரைத் தாங்குரைக்க. (77)

திருக்கை புலியன் றிருக்கை யாரற்
றிருக்கை கள்ளத் திருக்கைமீன்
சிவந்த திருக்கை சட்டித் தலையன்
சிறுந் திருக்கை வெட்டியான்
தருக்குங் குறிஞ்சித் திருக்கை கருமை
தயங்கி றுலொடு வெள்ளிறுல்
தண்டைச் சுறவு மொய்மூ ரல்கிளை
தக்கன் பாரைக் கல்லிறுல்
உருக்க முடைய கெண்டைக் கிரா
லூர்த்த வெள்ளைவாற் றிருக்கைமீன்
ஓலை வாலன் கருங்கண் ணுளன்
ஊரிற் பெரிய மீனெலாம்
வருக்க முடைய பூக ராசியின்
மடைத்தலை தத்திப் பாயவே
மாவலி கங்கை பெருகி வார
வளமை பாரும் பள்ளீரே.

இச்செய்யுளில் திருக்கையும் அதன் வகைகளையும், இருல் மீனும் அதன் வகைகளையும் கூறுகின்றார். ஓலைவாலன் - மச்ச விசேடம். கருங்கண்ணுளன் என்பதும் அது. வருக்கம் பூகராசி - பாக்குமரத்தின் கூட்டம். பெருகி வார - பெருகி வாய்க்க. வலிமை - (அதன்) வன்மை. பள்ளீரே - பள்ளிப்பெண்களே. பாரும் - செய்யுமென்னும் ஏவற் பன்மை வினைமுற்றுப் புதியன புகுதல். (78)

## புகழ்தல்

### விருத்தம்

பஞ்சவர்தூ துரைத்தவன்பொன் ஞலை வாழும்
பவளவாய் முகில்மருகன் பணைக்கை நால்வாய்க்
குஞ்சரமா முகப்பெருமான் தென்ப ருளைக்
கோடொன்றன் மணிவரைப்பூங் கொம்ப னாரே
நஞ்சுபழ கியவுமது கண்கள்வேலோ
நகைவதனங் குளிர்மதியோ நகைத்தண் கோதை
அஞ்சனவார் குழல்பருவ மஞ்சோ வேலை
யம்பவள மோகினிவா யதரந் தானே.

பஞ்சவர் தூதுரைத்தவன் - கிருட்டினன். கோடொன்றன் - ஒற்றைக் கொம்பன் (விநாயகன்). கொம்பனாரே - பூங்கொம்பு போன்ற தலைவியே! கோதை - பூமாலை. அஞ்சனம் - கருமை. பருவ மஞ்சோ - கார்காலத்து மேகமோ. அதரம் - உதடு. (79)

## பண்ணைக்காரன் தோற்றம்.

### சிந்து

மாறுகண்ணுஞ் சோகிப் பாகிற் பல்லி னழகுஞ் - சுத்த
மாவளந்த நாழிபோலே வாயி னழகுஞ்
சிறுசளி யாற்பெருத்த துள்ளு நாசியுங் - கொட்டை
திரித்த பருத்தியின்பைக் கூறை வயிறுங்

கீறிவேறு தசையொட்டி வைத்தி டுகாதுஞ் - சற்றே
கிடுகுகட்டிப் பெற்றமுட்டிக் காலு மாகவே
ஆறுமுக வேலர்துணை யார்வ டிவமோர் - பதி
ஞறனூர்பண் சேரும்பண்ணைக் கார னூர் வந்தார்.

சோகிப்பாகின் - பலகறையின் வெண்மைபோல. நாழி - படி. பைக்கூறை - துணிப்பை; முன் பின்னுகவந்த ஆறும் வேற்றுமைத் தொகை. கிடுகு - சட்டப்பலகை. (80)

காதளவு சென்றவிழிக் கஞ்சனந் தீட்டி - மலர்க்
காந்தளங்கை யாடகம்பொற் சூடகஞ் சூட்டித்
தாதளவு கோதைக்குமென் கண்ணியுஞ் சூட்டி - முலைச்
சந்தனச்சே றுட்டிநறுங் குங்குமங் கோட்டிச்
சோதிமணி நீலமயில் போலியல் காட்டி - மரைச்
சுந்தரச்சீ றடியிற்செம் பஞ்சுவைத் தூட்டி
ஆதிபரஞ் சோதிநாத வேத கீதனூர் - பண்ணை
யாண்டவரைக் கண்டுதொழ வாரும் பள்ளீரே.

அஞ்சனம் - கண்ணுக்கிடும் மை. சூடகம் - வளையல். மரை - தாமரை (முதற்குறை விகாரம்). (81)

## ஆண்டையை வணங்கல்

குட்டச்சொறி மேனியாரே கும்பிடுகிறேன் - உப்புக்
கொட்டுப்போல் வயிற்ற னூரே கும்பிடுகிறேன்
சட்டிவைத்த முகத்தனூரே கும்பிடுகிறேன் - தூங்கற்
சண்டைக்கடா வழக னூரே கும்பிடுகிறேன்
கட்டைமூளிக் காதனூரே கும்பிடுகிறேன் - மதிக்
கார்த்திகைமாங் காய னூரே கும்பிடுகிறேன்
அட்டைவா யுதட்டனூரே கும்பிடுகிறேன் - பண்ணை
யாண்டவரே யாண்டவரே கும்பிடுகிறேன்.

கொட்டு - மரப் பெட்டி. தூங்கல் சண்டைக்கடா - அசைகின்ற போர்க்கடா. மதி கார்த்திகை மாங்காயனுரே - கார்த்திகை மாதத்திலுண்டாகும் மாங்காய்போல அருமையானவரே. பண்ணையாண்டவரே - வயல் நிலத்தை யுடையவரே. ஆண்டவரே - அடிமையாகக் கொண்டவரே. (82)

### கலிப்பா

பார்ம திக்க வருஞ்சோழ மண்டலப்
பள்ளி பள்ளனை யுள்ளாக்கி வைத்தபின்
ஊர்ம திக்கு நிகர்வத னும்புயத்
தொருத்தி மூத்தவ ளாலே யுணர்ந்துமின்
கார்ம தித்த குழலினை யாடன்மேற்
கண்சி வந்து கறுத்தாண்டை சீறவே
பார்ம திக்கும் வயற்செய்கை பார்த்துடன்
வருதல் போற்பள்ளன் வருகின் றனே.

சோழ மண்டலப்பள்ளி - ஈண்டு இளையபள்ளி. உள்ளாக்கி வைத்த பின் - தன் வசப்படுத்தியபின். மூத்தவளாலே - மூத்த பள்ளியாலே. உணர்ந்து - (ஆண்டை) உணர்ந்து. சீறிட - (பள்ளனைக்) கோபிக்க. (83)

## விதைவகை கேட்டல்

### சிந்து

பொருப்பி னெல்விதைக் கோட்டையி னீட்டிய
பூட்டு நாணுகத் தீட்டமுஞ் சிந்தை
விருப்பு மேழிக் கலப்பை வகையும் மண்
வெட்டியும் சொர்ணக் கொழுவின் வகையும்
கருப்ப வேலிப் பருளையில் வாழுமுக்
கண்ணனர் பண்ணை மாட்டின் வகையும்
இருப்பும் போன செலவுநன் றாய்க்கணக்
கேற்றிச்சொல் லீழ மண்டலப் பள்ளா.

முக்கண்ணனூர் - விநாயகர்; தந்தைக்குள்ளது போல இவருக்கும் மூன்று கண்ணுண்டு என்க. பண்ணை - வயல். ஈழ மண்டலப் பள்ளா - யாழ்ப்பாணத்துப் பள்ளனே. (84)

சிந்து ரத்துணை புள்ளூ ரயன்பணி
தென்ப ருளைப் பரஞ்சோதி நாத
தந்தி யேறிய வாகனந் தின்று
சமைந்த நெற்கோட்டை யாயிரங் காணும்
வந்த பாவலர் வெங்கலி தீர
வழங்குங் கோட்டையோ ரைந்நூறு காணும்
இந்த நாளினி லென்பொரு ளாய்வைத்
திருந்த தோர்வட்டுக் கோட்டையொன் றுண்டே.

சிந்துரத் துணை புள் - சிவந்த இரண்டு கால்களையுடைய அன்னப்புள். துணை - ஆகுபெயர். துணைப்புள் என்பது துணை புள்ளெனச் சந்தவின்ப நோக்கி மிகாதாயிற்று. பரஞ்சோதி நாத தந்தி - விநாயகர். வாகனம் - பெருச்சாளி. வெங்கலி - கொடிய துன்பம். வட்டுக்கோட்டை - திரண்ட நெற்கோட்டை; பருளைக்கு அருகாமையிலுள்ள ஓர் நகரம். (85)

தெற்றிக் காளை கழுத்தால் நெரிக்கச்
சிதைந்து போன நுகமொரு கோடி
சுற்றிப் பூணுங் கயிற்று லழுந்தத்
துளைப றிந்த திருநூறு கோடி
இற்றை நாளுக மொன்றையுங் காண்கில
னேழு நான்கிலொன் றில்லாத நாளில்
மற்றப் பாம்புக்கும் பூரத்துக் கும்பகல்
வைத்த நாளுக மொன்றுண்டே யாண்டே.

நுகம் - நுகத்தடி. எழு நான்கில் - இருபத்தெட்டில். ஒன்று இல்லாத நாளில் - ஒன்று குறைந்த நாளில்; எனவே இருபத்தேழு நாளில் (இருபத்தேழு நட்சத்திரங்களில்): பாம்புக்கும் - ஆயிலி

யத்துக்கும். பூரத்துக்கும் - பூர நட்சத்திரத்திற்கும். பகல் வைத்த நாள் - நடுவிலுள்ள நட்சத்திரம்; அது மகம். மகமாகிய நுகம் ஒன்றுண்டு என்க. வானத்திற் செல்லும் நுகம் (மகம்) ஒன்றேயன்றி வேறு நுகம் கண்டிலேன் என்பதாம். (86)

கத்தி வேலம்பு வில்லுடன் தெண்டையங்
கட்டு வாங்கங் கருந்தா துலக்கை
பைத்த பாம்புவன் பாசந் திரிசூலம்
பரித்த வீரப் பரஞ்சோதி மூர்த்தி
முத்து நெல்வய லோரந் திருத்த
முறிந்த தையிரண் டாயிரங் காணும்
வைத்த மண்வெட்டி யொன்றுவைத் தேன்மன
மஞ்சிப் பார்க்கிறேன் காண்கில னுண்டே.

தெண்டை - ஓர் ஆயுதம். கட்டுவாங்கம் - தண்டாயுதம். (87)

அக்க மாலை கமண்டலம் புத்தக
மாடல் வெங்கதை யேந்திய மேலோர்
திக்கெ லாம்புகழ் வீசுஞ் சுழிபுரத்
தென்ப ருளைப் பரஞ்சோதி நாதர்
தக்க பண்ணை யுழுதிடத் தேய்ந்தன
சாற்றில் மட்டிலக் கேயில்லை யானால்
மிக்க வீர ரகுநா யகன்கொடி
மேழி யொன்றுண்டு காட்டுவே னுண்டே.

இரகு நாயகனுக்கு மேழிக் கொடி யாதலின், அக்கொடியி லுள்ள மேழியேயன்றி வேறு மேழிகண்டிலேன் என்பதாம். (88)

வன்னச் சோதிநீ லோற்பல மோர்கதிர்
மாது ளம்பூ மணிவீணை தாங்குந்
தன்னைத் தானனை யான்றென் பருளையிற்
றம்பி ரான்றன் வயலுழு காளை



தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது
மேழிச் செல்வம் கோழை படாது.

பின்னர்ச் சாலினிற் சங்கினிற் றட்டப்
பிளந்து போன கலப்பை யனந்தங்
கன்னத் தோர்குண் டலப்பல தேவன்
கரத்தி லேயோர் கலப்பையுண் டாண்டே.

பலதேவன் - பலராமன். பலதேவனது கலப்பையேயன்றி வேறு கலப்பை கண்டிலேன் என்பதாம். (89)

வேணிக் கங்கையர் காதலர் வாளுளை
வெண்சிங் காசன மேறிய போதர்
சேணிற் கண்விஞ் சையர்பணிந் தேத்திய
தென்ப ருளை விநாயகர் நாட்டில்
ஆணிப் பொற்கொழு வெல்லாம் நிலம்பட்
டழிந்து கூர்மை யகன்றத னேகம்
மாணிக் கஞ்சொன்ன கோவையி லேகொழு
வைத்தி ருப்பது பார்மின்கா ணண்டே.

ஆணிப்பொன் - ஒருவகைப் பொன் (உயர்ந்த பொன்). மாணிக்கஞ் சொன்ன கோவையில் - மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளிய திருச்சிற்றம்பலக்கோவையில். கொழு - காறு; கொளு - கொழு. அஃதாவது, மாணிக்கவாசகர் சொல்லியருளிய கோவையிலுள்ள கொளு (கொழு) வேயன்றி வேறு கொழுக் கண்டிலேன் என்பதாம். கொளு என்பது ளகரழகர பேதத்தால் கொழு என்றாயது. கொளு - துறைக்கருத்து. (90)

செழுநி லாமதிக் கண்ணிச் சடாடவித்
தேவ னருக் கொருகாளை போச்சு
வழுவில் கோடி யுருத்திர ரென்றுளர்
வாங்கி னரந்த மாட்டறி யேனன்
பழுதில்லா நாரை யொன்று குளந்தத்தப்
பாய்ந்து போகிய தாலிந்தப் பூமி
உழுத காளையொன் றுண்டது பொன்னுலை
யூரி லேவாருங் காட்டுவே னண்டே.

ஒருகாளை - நந்தி. உழுதகாளை - திருமால். இதனை, "எருத்துக் கொட்டிலும் பொன் வேய்ந்திடச் செய்தேம்" என்பதனு லுணர்க. பொன்னூலையூர் - ஓர் வைணவத் திருப்பதி. (91)

### கொச்சகம்

சிந்தைமதிக் கெட்டான் செழித்தபண்ணை யாண்டவனுக்
கிந்தவகை பள்ள னியம்புமொழி யைக்கேட்டு
வந்தகுல மூத்தாள் வறிதுநகை யுந்தோற்ற
முந்துகுடும் பன்சரிதை மூதலிக்கத் தொடங்கினளே.

குடும்பன் - பள்ளரிற்றலைவன். மூதலித்தல் - ஒப்புவித்தல்.

## முறைப்பாடு

### சிந்து

பண்பு நீதி யறியாத தூக்குணிப்
பள்ளன் செய்கரு மங்களைக் கேளும்
உண்ப துங்குடிப் புங்களிப் புங்கண்
ணுறக்க மும்பிளை யாள்குடி லோடே
எண்பொ ருந்துமென் புத்தியுங் கேளான்
யானும் பின்னை யுரைப்பதும் விட்டேன்
பெண்பி றந்தது நான்மட்டு மோவிந்தப்
பேச்சை யார்க்கினி விள்ளுவே னண்டே.

தூக்குணிப்பள்ளன் - உரோசமில்லாத பள்ளன். குடில் - குடிசை. விள்ளுவேன் - சொல்லுவேன். (93)

கட்டு நீர்வயற் செய்கையுந் தீண்டான்
கலகப் பள்ளி மயல்வலைப் பூண்டான்
பட்டியின் மாட்டைக் கிட்டியும் பாரான்
பழைய தாரமென் றென்னையுஞ் சேரான்

சட்டைக் காரியை விட்டுப் பிரியான்
சற்றே பிரிந்தா லும்மிக்குத் தரியான்
பெட்டிச் சோற்றுக்குங் கள்ளுக்கும் நெல்லெல்லாம்
பெட்டியா லள்ளிக் கொட்டிறு னுண்டே.

கலகப் பள்ளி - கலகத்தையுடைய இளையபள்ளி. பெட்டி - அளவுக்கருவி. (94)

தூர திட்டியன் னுன்பண்ணை பாரச்
சுமையெண் ணுனிரைத் தூண்டிவிட் டார்க்குப்
பார மெல்லா மிதப்பிற்கண் ணுமிந்தப்
பள்ள னுக்குக்கண் பள்ளத்தி மேலே
தார மென்றென் கழுத்தின்முன் னுளிற்
சரடு கட்டிய பாரதம் வைத்தோன்
ஆர வாரஞ்செய் கோட்டுக்கும் பாட்டுக்கும்
ஆட்டுக் குஞ்சமத் தாயின னுண்டே.

மிதப்பில் - தக்கையில். பாரதம் - சுமை; ஆகு பெயர். ஆட்டுக்கும் - கூத்தாட்டத்திற்கும்; முதனிலை திரிந்த தொழிற் பெயர். சமத்து - சமர்த்து என்பதன் சிதைவு. (95)

மஞ்சொத்த குழலா-ளிளையவள்-குஞ்சுக்கு முதலா-நெல்லு
மணிவிற்றுத் தட்டான்-கையிற்-பணிசெய்வித் திட்டான்
வஞ்சத்துக் குரியா-கற்ற-விஞ்சைக்குப் பெரியா-ளிட்ட
மருந்துக்குவிருந்தா-கிக்கொண்-டிருந்துட்கிக்கரைந்தான்
கஞ்சிக்குப் பிறகே-நின்று-நெஞ்சிக் கொண்டிருப்பா-னவள்
காலையும் பிடிப்பா-னவள்சொன்னல்-நாகமும் பிடிப்பான்
பிஞ்சுற்ற மதிநே-ரொற்றைக்-கொம்பத்த கரியா-யெட்டிப்
பிடியுங்கைச் சவுக்காற்-கட்டி-யடிமின்கா னுண்டே.

குஞ்சுக்கு முதலா - பறவைக்குஞ்சு முதலாக (பறவைக் குஞ்சு - ஈண்டுக் கோழிக்குஞ்சு.) பணி - ஆபரணம். உட்கி -

நடுங்கி நாகமும் - பாம்பையும். அத்தகரியாய் - கையையுடைய யானைபோல. கரியாய் என்பது எமனைப் என்புழிப்போல. ஆய் - உவமவாசகம். (96)

ஓச்சடி யடித்தா-லென்ன-பேச்சிவன் குடும்பன்-இந்த
ஊருக்கு மிணங்கான்-தலையாரிக்கும் வணங்கான்
பூச்சிய முறையுண் பேச்சுமூ படைச்சால்-வழி
புரிவளைக் குலஞ்சேர்-சுழிபுரநகர்ப் பெருமான் [ண்ட
ஆச்சியங் கவர்ந்தான்-எதிர்வரு-பேச்சிகொங் கையின்-பாலு
வரிக்கொரு மருகன் பண்ணை நிலைத்திட வேண்டிற்
காய்ச்சலை யடுத்தே-யறத்-தோச்சிடு மிரும்பாற்-பண்ணிக்
கடுவிலங் கிடவே-யினித் தடைசெய்யீ ராண்டே.

புரிவளைக்குலம் - முறுக்கினையுடைய சங்குக் கூட்டம். ஆச்சியம் - நெய்: ஈண்டு வெண்ணெயை யுணர்த்திற்று, ஆகு பெயர் முகத்தான்; காரியவாகு பெயர். பேச்சி - பூதகி. அரி - திருமால். பண்ணை - வயல். காய்ச்சு - ஆசெதுகை. தோச்சிடும் - தோய்த்திடும், மரூஉவொடு போலியும் பெற்றது; இடு - துணைவினை. ()

**விருத்தம்**

பள்ளனிரு காலினுக்கு விலங்குபூணப்
பண்ணுவித்தா ளென்றிளைய பள்ளி காணு
வெள்ளளவு மிரக்கமென்ப திலையோ வாண்டைக்
கென்னபழி யென்றிரங்கிக் குழைந்து போனாள்
கள்ளவழி யாலீழப் பள்ளிபோந்து
கள்ளும்நல்ல கொழுத்தமறிக் கறியுங் கூட்டித்
துள்ளியுள்ள அகந்தையினாற் காலிற்பூண்ட
தொடுவிலங்குப் பள்ளனுக்குச் சோறிட் டாளே.

ஈழப்பள்ளி - மூத்தாள். ஈழப்பள்ளி சோறிட்டாள் என்க. ()

## பள்ளன் மூத்த பள்ளியை வேண்டல்

### சிந்து

பட்ட நெஞ்சி லடாதன செய்தார்
படாத தெல்லாம் படுவார்க ளென்கை
கெட்டி யாயறிந் தேனினி நீயிட்ட
கீற்றை யுங்கட வேனொருக் காலுந்
தொட்ட கோபந் தவிர்கணக் காம்படி
சொல்லுவே னுங்க ளாண்டைக்குச் சொல்லித்
தட்டு காற்றளை நீக்குவித் தேயென்னைத்
தாங்கிக் கொள்ளீழ மண்டலப் பள்ளீ.

தவிர் - ஒழி. கால்தளை - காலிற்பூட்டிய விலங்கு. தாங்கிக் கொள் - ஏற்றுக்கொள். ஒருக்கால் என்பது உடன்பாட்டொடு முடியின் ஒருக்கால் என இயல்பாயும் எதிர் மறையொடு முடியின் விகாரப்பட்ட எண் மிக்கும் வருதல் வழக்காறென்க. "அடாது செய்பவர் படாது படுவர்" என்பது பழமொழி. (99)

### மூத்த பள்ளி ஆண்டையை வேண்டல்

கண்ணி லேகரந் தீண்டிவிட் டாலந்தக்
கைவி ரல்தறிப் பார்களு முண்டோ
வண்ண மான முலைவிழுந் தாலவ்
வயிறு தாங்கக் கடனல்ல வோதான்
அண்ணல் வாரி யுலகத்தி லேயடி
யாத மாடு படியாத தென்கை
திண்ணந் திண்ணஞ் சிறியோர் செயும்பிழை
சிறி யோர்பொறுக் கக்கட னுண்டே.

'கண்ணிலே கரந்தீண்டி விட்டால் அந்தக் கைவிரல் தறிப் பார்களுமுண்டோ' என்னும் கருத்துப்பற்றியே "கண்மலரியற் கைபடாதோ" என்றார் பிறரும். 'சிறியோர் செயும் பிழை சிறி யோர் பொறுக்கக் கடன்' என்பதைச் "சிறியோர் செய்த சிறு

பிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப்பது கடனே" என்பத ேனாடு ஒப்பிடுக. திண்ணம் திண்ணம் என்னும் அடுக்குத் துணியு மேற்று. (100)

ஒறுத்த தாற்பய னென்பொறுத் தாருக்
குலக முள்ளள வும்புக ழென்றெ
மறுத்த விர்ந்திடு வள்ளுவ னார்சொன்ன
மான வெள்ளைக் குறளறி யீரோ
வெறுக்கை போது மினியெளி யான்பிழையான்
மேன்மை யாக்கணக் கொப்புத் தருவான்
செறுத்த காவலில் வைத்திடு பள்ளனைச்
சேர்த்த காற்றளை மாற்றுவீ ராண்டே.

வெள்ளைக்குறள் - குறள் வெண்பா. அஃது, "ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந் துணையும் புகழ்" என்பதனாலறியப்படும். வெறுக்கை - தண்டனை. காரணத் தைக் காரியமாக உபசரித்தார். ஆண்டே - ஆண்டவனே என் பதன் மரூஉ. (101)

## விருத்தம்

ஊசல்வட மூர்சகட முழன்றிடுபம்
பரம்பேய்த்தே ரொத்த வாழ்விற்
பாசமிகு மறலிதனக் கீடாக
வருந்தல்பா ராத தேதோ
வீசுகதிர்ச் சலஞ்சலங்கண் முத்தநிலா
வொளியெறிப்ப வேரி யேறி
வாசமிகு குவளைமலர் சுழிபுரத்தா
லயத்தனொற்றை மருப்பி னானே.

வாழ்வானது மேல் கீழாகவும் கீழ் மேலாகவும் மாறி மாறி வருதலின், 'ஊசல் வடம்' என்றும், 'சகடம்' என்றும், அது ஓரிடத்தும் நில்லாது சுழன்று வருதலின் 'உழன்றிடு பம்பரம்'

என்றும், உள்ளதுபோலத்தோன்றி யில்லதாய் கிற்றலின் 'பேய்த்தே ரொத்த' என்றும் கூறினர். மறலி - இயமன். வேரி - வாசனை. மலர் சுழிபுரம் - வினைத்தொகை. மருப்பினன் பாரா தது எதோ என இயையும். (102)

## பள்ளன் ஆண்டைக்குக் கணக்கொப்பித்தல்

### சிந்து

குட்டைநாம்பன் வெள்ளிக்கண்ணன் குறுங்கழுத்தன்
  கூழைவாலன் வெடிவாலன் வட்டச்செவியன்
மொட்டைத்தலை மோழைக்காளை புள்ளிக்கறுப்பன்
  முறிகொம்பன் தறிகொம்பன் சுத்தக்கறுப்பன்
பட்டிக்காளை குன்றுமணிக் கண்ணன்மயிலை
  பால்வெள்ளை நாரைக்காளை காற்சிலம்பன் [ணை
துட்டக்கள்ளன் வளைகொம்ப னொற்றைக் கொம்பனார்பண்
  சூழ்ந்தபல மாட்டின்வகை சொல்லினே னாண்டே.

குட்டை நாம்பன் முதலிய பெயர்கள் மாட்டின் விசேட வகைகளைத் தெரிவிக்கின்றன. ஒற்றைக் கொம்பன - விநாயகன். பண்ணை - வயல். நாம்பன் - இள எருது; நாகு - கிடாரி. (103)

மாட்டுவகை யும்பவளத் தாலுழக் கோலும்
  பரிமளச்சந் தனமரத்தாற் செய்பட வாளும்
நாட்டுமணி மேழியுங்கை வச்ர நுகமுஞ்சுட்ட
  நல்லபொன்னினாலே சமைத்த கொழு வகையும்
சேட்டிளம் பருதியின்ப்ர காச முடையார்தூய
  தென்பருளை யன்பர் நண்பர் செய்யுமருளாளர் [ளிச்
தோட்டுமலர்ப் பொன்னிதழிச் சூட்டர் பண்ணைக்கேவெள்
  சோதிநாஞ்சி லின்வகைகள் சொல்லினே னாண்டே.

உழக்கோல் என்றது உழவுகோலை; அது முட்கோல். பட வாள் - கலப்பையின் ஓர் உறுப்பு. மேழி - கலப்பை. நுகம் -

நுகத்தடி. கொழு - காறு. பருதியின் - சூரியனைப்போல; இன் - ஒப்புப் பொருளது. நண்பர் - நண்பு; அர் - போலி. அருளாளர் - அருளையுடையவர். நாஞ்சில் - கலப்பை. (104)

பார்புகழுங் குண்டைச்சம்பா விஞ்சருச் சுனம்பஞ்ச
பாலைபசுங் கர்ப்பூர வாடைக் கறுப்பன்
சேருமணல் வாரிகுள வாழை கறுப்பன்
சின்னட்டிபொன் னுயகன்சொற் காடைக்கறுப்பன்
சீரழ கியவாணன் மங்கா மைக்காத்தான்
செம்பவளச் சம்பாமுத்து மாலைக் குறுவை
வார்கருப்பஞ் சாற்றிறைற்றல் வீற்றிருப்ப தோர்பண்ணை
வைத்துக்கட்டு வித்துவகை செப்பினே னுண்டே.

இச்செய்யுளில் நெல்லின் விசேடங்களைக் கூறுகிறார். குள வாழை - ஓர் நெல்லினம். (105)

## தலைவன் பொருள் வயிற் பிரிந்துழித்
## தலைவி வருத்தம் பாங்கி கூறல்

### கட்டளைக்கலித்துறை

சங்கத்தை யேந்தும் பரஞ்சோதி நாதர் சயிலமின்னார்
புங்கத்தை வாய்ந்த மணிநீலப் பார்வை பொலியுமுத்து
அங்கத்தி லேற்றிடு தங்கத்திற் பீருமுண்டா யிருக்க
வங்கத்தி லேறித் தனந்தேடப் போனவர் வந்திலரே.

சங்கத்தை யேந்தும் பரஞ்சோதிநாதர் - சங்கினைக் கையில் தாங்கிய பரஞ்சோதி விநாயகர். புங்கம் - அம்பு; அத்து - சாரியை. பார்வை - கண்; ஐ - கருவிப் பொருள் விகுதி. பொலிதல் - உகுத்தல்; சொரிதல். முத்தும் - முத்துப் போன்ற நீரும்; உவமையாகு பெயர். அங்கத்தில் - சரீரத்தில். தங்கத்தின் - தங்கத்தைப் போல. பீர் - பசலை. வங்கம் - மரக்கலம். (106)

## முகூர்த்தங் கேட்டல்

### சிந்து

செம்பருதி வாரமதிற் பூரணை யென்றார்
தேட்கடையென்றார் சித்த யோகமு மென்றார்
கும்ப முகூர்த்தமென்றார் செம்பொ னோரையென்றார்
குஞ்சரக் கரணமென்றார் கூடிப் பெரியோர்
நம்பு கலப்பைச்சக்ரம் நன்றாய்ப் பொருந்துமென்றார்
நாயக ரெமைப்புரக்கு நாதனார் நாட்டில்
வம்பவிழ்பூம் பண்ணையி லேர்ப்பூட்டி யுழவே
நன்மனத் தடனேபோதி யீழமண் டலத்துப்பள்ளா.

பருதிவாரம் - ஞாயிற்றுக்கிழமை. பூரணை - பௌர்ணிமை. தேட்கடை - மூலநாள். கும்ப முகூர்த்தம் - கும்ப லக்கினம். பொன் ஓரை - தனுசும் மீனமும்; அது குரு இலக்கினம். குஞ்சர கரணம் - கரணம் பதினொன்றில் ஒன்று; கரசகரணம் என்பதன் பரியாய பதம். போதி - போவாய். இச்செய்யுளிற் கூறிய சுப முகூர்த்தத்தில் உழுதால் பயிர் விருத்தியாகு மென்பதாம். (107)

ஊற்று தேன்பொழில் சூழ்தென் பருளை
யுகந்த ஞானப் பரஞ்சோதி தன்னைப்
போற்றிக் கொள்ளறி யாமற்பொன் னேரிணைப்
பூட்டிச் சால்விட் டுழுகின்ற நேரந்
தோற்று மேற்றுக் குறுங்கண்ணன் வாளைமீன்
துள்ளிப் பாய நுகத்தை முறித்துச்
சீற்றக் காளை வெருண்டுகொம் பாற்குத்தச்
சேற்றிற் பள்ளன் விழுந்தான்கா ணாண்டே.

குறுங் கண்ணன் - மாட்டின் விசேடம். நுகம் - நுகத்தடி. காளை - எருது. கொள் என்பது கொள்ளுதல் என முதனிலைத் தொழிற் பெயர். (108)

பள்ளன்பண்ணை மீது விழவே—மூத்த
பள்ளி பரிதவித்து முகத்திலறைந்து
துள்ளிவிழி நீர்சொ ரியவே—யழுதழுது
சோதிமுலைப் பந்தி லடித்துக்
கள்ளவிழ்பூங் கோதை குலைய—விழுந்தெழுந்து
கனன்மெழுகி னுருகி யிளைய
குள்ளிமருந் தீட்டின் மயக்கோ—நாச்சிமார்தங்
குறையோவென் றழுதி ரங்கினள்.

மூத்த பள்ளி-பெரிய மனைவி. பரிதவித்து-வருந்தி. முலைப் பந்து - முலையாகிய பந்து; உருவகம். கோதை - கூந்தல். இளைய குள்ளி-இளைய மனைவி. நாச்சிமார்-சத்த தேவிகள்; அவராவார்: அபிராமி, மாகேசவரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, காளி. (109)

## இரங்கல் - கோச்சகம்

தேன்கிடந்த தொடையானே தேடரிதாங் கண்மணியே
வான்கிடந்த புகழானே மலைகிடந்த தோளானே
யூன்கிடந்த மெய்தளர்ந்தே யோவியம்போல் வயலணையில்
என்கிடந்தா யென்னகுறை யின்னதென்று சொல்லாயே.

மலைகிடந்த - மலையை யொத்த; கிடந்த - உவமவாசகம். ஓவியம - சித்திரம். (110)

கண்ணனுதற் கண்ணனருள் காரியைய னார்குறையோ
விண்ணினிடி மின்னுமல் வீழ்ந்ததையா வென்புகல்வேன்
துண்ணறிவு முயிர்ப்புமின்றி யொடுக்கமுட னீகிடந்தாற்
பண்ணைவகை தமைப்போந்து பார்ப்பவரார் காப்பவரார்.

காரி - வயிரவர். ஐயனார் - சாத்தனார் (அரிகர புத்திரர்) உயிர்ப்பு-மூச்சு. பண்ணை வகைதமை-வயலின் வகையை. (111)

கொங்கை யுரந்தடியாக் குழன்முடியாக் காலத்தே
மங்கலநா ணெனக்கணிந்து வரைந்ததுவு மறந்தனையோ
பங்கவயற் செய்கைசெய்யப் பரஞ்சோதி காக்குமென்று
செங்கையினீர்தெளித்திடவேதெளிந்துபள்ளவெழுந்தனனே

உரம் - மார்பு. தடியாக் காலத்து - புடைக்காத காலத்து. குழல் முடியாக் காலத்து - கூந்தல் முடிக்கப்படாத காலத்து காலத்து என்பது தடியா என்பதனோடும் இயைக்கப் பட்டது. பங்கம் - சேறு. (112)

**வெண்பா**

சுத்தர்பணிந் தேத்துஞ் சுழிபுரத்து வீற்றிருக்கும்
அத்த பரஞ்சோதி யண்ணலே—கைத்தலத்துச்
சூலந் திரித்துமுனந் தோன்றால காலமெனக்
காலன் வரும்போது கா.

சுத்தர் - மனத் தூய்மையோர். அத்த - பிதாவே! அண்மை விளி. முதல் வேற்றுமை அத்தன். முனம் தோன்று ஆலகாலம் என - திருப்பாற் கடல் கடைந்த காலத்துத் தோன்றிய கொடிய விடம் போல. காலன் - யமன். (113)

**சிந்து**

உழுது பரம்படித்தேன் சாலி விதையை
உண்மைபொலி நன்முகூர்த்தந் தன்னில் விதைத்தேன்
அளவாய் முளைத்தபின்பு நீரைப் பாய்ச்சினே
னம்புயனும் மாதவனும் போற்றித் துதிக்கும்
மழகளி றனபரஞ் சோதிப் பெருமான்
வழங்கு கருணையின் வளர்ந்த நாற்றைத்
தொழுது நடும்வடிவு காண வாரும்
சொல்லவந்தேன் காணும்பண்ணைக் கார னுண்டே.

சாலி விதை - நெல் விதை. தொழுது - விநாயகனைத் தொழுது; இந்திர தெய்வத்தைத் தொழுது எனவுமாம்; நிலமகளைத் தொழுது என்றலும் ஒன்று. நடும் வடிவு - நடுகின்ற அழகு. பண்ணைக்காரன் - பள்ளர் தலைவன். (114)

### நற்குயிரங்கல்

#### விருத்தம்

காமன்மகிழ் மைத்துனனார் பொன்னலைப்
பதியிலுறை காயா மேனி
மாமன்மகிழ் மருமகனார் சுழிபுரம்வாழ்
பரஞ்சோதி வரதர் நாட்டிற்
பூமகள்கேள் வனையனைய காளையுடன்
தழல்வடவை பொங்கு கானிற்
சேமநிதி மங்கலமான் சீறடிவைத்
தெவ்வாறு செல்கின் றாளே.

காளை - தலைமகன். கானில் - பாலை நிலத்தில். மங்கல மான் - மங்களகரமான மான் போன்ற தலைவி; மான் - உவமை யாகு பெயர். சீறடி = சிறுமை + அடி; உவமைப் பொருள்களைச் சீறுகின்ற அடி எனினுமாம். (115)

### நாற்று நடவு

#### சிந்து

திங்க ளாடப் பணியு மாடத்
திருச்ச டாடவி யாடவே
செறிந்த கனகக் கடுக்கை யாடச்
சிந்து ரத்துரி யாடவே
அங்கை மான்மழு வாட வம்புலி
யரவ மாட மன்றினில்
ஆடி னாரவர் சேய்ப ருளை
யமர்பரஞ் சோதி வயலுளே
கொங்கை யாட மகரக் குழையுங்
கொப்பு மாடச் சுரும்பினக்
கோவை யாடக் கோதை யாடக்
கோலமுத் தார மாடவே

சங்க மாடச் சரிக ளாடத்
தனத்திற் கச்சசைந் தாடவே
தயங்கு நாற்றை யொருவர்க் கொருவர்
தள்ளி நடவாரும் பள்ளீரே.

கடுக்கை - கொன்றை மாலை. சிந்துரத்துரி - யானைத்தோல். மன்று - கனகசபை. மன்றினிலாடினர் - நடராசப்பெருமான். சேய் - பிள்ளை. சுரும்பினக்கோவை - வண்டின் வரிசை. கோதை - கூந்தல், சங்கம் - சங்குவளையல்; அம் - சாரியை (ஆகுபெயர்). சரிகள் - கருவளையல். பள்ளீரே - பள்ளப் பெண்களே. வாரும் என்பதில் உம் - முன்னிலை வினைமுற்று விகுதி புதியன புகுதல் என்பதாம். (116)

சின்னி வன்னி நாகி யேகி
திருவி யுருவி குருவியுஞ்
சேவி யாவி பூவி யேவி
செல்லி தன்னுடன் வல்லியும்
பொன்னி கன்னி வேலி பாலி
புளுகி சிவப்பி கறுப்பியும்
புலிச்சி கலிச்சி வீரி சூரி
பூமி யுடனே சோமியும்
பன்னு சுருதி முனிவர்க் குரிய
பரன்ப ருளைப் பதியில்வாழ்
பவள மேனியன் வயலில் நாற்றைப்
பாடி நடவாரும் பள்ளீரே.

சின்னி முதலியவை பள்ளச்சிகளின் பெயர். (117)

மருதி டைத்தவழ் பசிய வித்தக
மரக தப்புயல் மருகனார்
வலவை பக்கலி லுறையு முத்தம
மதக யத்திரு வதனனார்

சொருகு கொத்தல ரளக முக்கணி
யுமைய ளித்திடு புதல்வனார்
சுழிபு ரப்பதி யால யப்பரஞ்
சோதி நாயகர் வயலுளே
யிருவி ழிக்கயல் சுறவு கிட்டுற
விரல ணித்தொகை பிறழவே
யிடத்திற் றெடுத்து முடித்த நாற்றை
யெடுத்து நாங்க ணடச்செய்தோம்
வெருவி முட்பொதி பலவி னிற்கனி
சிதற லான்மிகத் திருக்குடன்
விழுந்து மீன்கள் குதித்துப் பாயும்
விதத்தைப் பாரும் பள்ளீரே.

மரகதப்புயல் - திருமால். வலவை - வல்லபைதேவீ. கயம் - யானை. வதனம் - முகம். முக்கணியுமை - மூன்று கண்களை யுடைய உமாதேவி (முக்கணி - காளி) சுறவு விழிக்கயலைத் தம் மினமெனக் கருதிக்கிட்டுற என்க. சுறவு - மருதநிலச்சுறவு என்க.

தண்ணென் தொடைய விதழிப் புங்கவன்
தந்த கூரொற்றைக் கொம்பனார்
தாரணிப் புவன பூரணப் பரம
காரணப் பொருளு மாயினார்
வண்ணஞ் சிவந்த புரத்தினார் தொந்தி
வயிற்றின் முப்புரி நூலினார்
மஞ்சு சூழ்பொழிற் றென்ப ருளையில்
வாழ்பரஞ் சோதி வயலுளே
பண்ணி னிசைந்த சொல்வி லேநுதல்
வில்லி லேயிணை வில்லிலே முலை
பல்லிலேமுலை வல்லி லேயரைப்
பணத்தி லேமஞ்சண் மணக்கிலே

கண்ணி லஞ்சனத் தீட்டி லேநுதற்
சூட்டி லேகுழைத் தோட்டிலேகுழற்
காட்டி லேயிசைப் பாட்டிலேதலை
யாட்டி ருனடி பள்ளீரே.

தொடையல் - பூ மாலை. புங்கவன் - சிவன். சிவந்த புரத்தினர் - சிவந்த திருமேனியை யுடையவர்; பவளமேனி யராதலின் இங்ஙனங் கூறினர். தொந்திவயிறு - தொப்பை வயிறு. மஞ்சு - மேகம். இணைவில் என்றது புருவத்தை. முலைப் பல் - முல்லையரும்பை யொத்தபல் முல்லை என்பதன் இடைக் குறை விகாரம். முலைவல் - முலைபாகிய சொக்கட்டான்காய். அரைப்பணம் - அல்குல். நுதற்சுட்டு - நெற்றிப்பட்டம். குழைத் தோடு. குழையோடு தோடு; குழை, தோடு இவைகள் காதணி. குழையாகிய தோடு எனினுமமையும். குழற்காடு - உருவகம். ஆட்டிருன் - ஆட்டுகிருன் என்பதன் சிதைவு. (119)

தேடிப் பொருளைப் புதைத்துக் கொழித்துத்
தெளித்துக் குழைத்து வடித்தநூல்
தெள்ளு நாவ ருள்ள மேலுறை
தேவ ஞர்திரி கோவனூர்
வாடிச் சிறுகு மிடைப்பு லோமசை
மகிழ்நன் பூசித்த வரதனூர்
மண்ட லம்புகழ் தென்ப ருளை
வாழ்பராஞ் சோதி வயலுளே
கோடி வளைந்த கரும்பு நூரங்
குனிக்கு மிந்திர சாபமாக்
கொடிம ருங்குன்மின் ஞக வேநுதல்
குழவிப் பிறையி னிலங்கவே
யாடிச் சரிந்த கோதை மேகங்க
ளாகத் தரளக் கோவையை
யாலிக் குலமென்று பீலிக் குலமயி
லாலிப் பதைப்பாரும் பள்ளீரே.

பொருளை - உண்மைப் பொருளை. தேடி - ஆராய்ந்து. நாவர் - ஈண்டு மெய்யடியார். திரிகோவனுர் - மூன்று கண்ணை யுடையவர்; (கோ - கண்). புலோமசை - இந்திராணி. புரூரம்-புருவம். இந்திர சாபம்-இந்திரதனு. மருங்குல் - இடை. குழவிப் பிறை - இளம்பிறை. ஆலிக்குலம் - மழைத் துளியின் தொகுதி; ஆலாங்கட்டியின் தொகுதியுமாம். ஆலிப்பதை - ஆரவாரிப்பதை.

நாளுங் கலியைத் துரப்பதே யன்றி
நாளை வாவென் றுரைத்திடான்
நம்பி னோர்க்கருள் தருத யாபரன்
வெம்பி னோர்க்கரி யேறனுன்
வாளின் றடக்கைச் சந்த்ர சேகர
மானு முதலி வாழவே
வரந்தந் துதவு தென்ப ருளை
வாழ்பரஞ் சோதி வயலுளே
தாளிற் பதும ராகச் சுவடு
தயங்கு சுப்பிரம் பதியவே
சருவிச் சருவி யொருவர்க் கொருவர்
தயங்கு நாற்று நடுகைக்கே
மீளத் திரும்பிப் பள்ளனைப் பார்த்து
வெண்ணகைத் தரளங் காட்டவே
வெருவிப் பங்கயங் குவியக் காவிகள்
வெடிப்பதைப் பாரும் பள்ளீரே.

கலி - வறுமை. வெம்பினோர் - பகைத்தோர். அரியேறு - ஆண்சிங்கம். சந்திரசேகர மானுமுதலி - ஓர் வள்ளல். பதுமராகச் சுவடு - பதுமரேகை. சுப்பிரம் - ஒளி; வெண்மையுமாம். சருவிச் சருவி - மிக நெருங்கி; (சருவுதல்-நெருங்குதல்). வெண்ணகைத் தாளம் காட்ட என்றது சிரித்தலை. பற்களின் ஒளியைச் சந்திரிகை யென்று தாமரை குவிதலையும் நீலோற்பலங்கள் மலர்தலையும் பாருங்கள் என்றார். (121)

அத்தி மணிச்சுடி கைத்துயி லிற்பயில்

பச்சை முகிற்கொரு மருகனு

ரத்தி முகத்தவர் நித்தர் விழித்திரி

யற்புத வித்தகர் வயலுளே

முத்து முலைச்சிய ரக்கு வலைச்சிய

ரற்ற விடைச்சியர் நடுகைக்கே

முத்தை யனத்திரண் முட்டை யெனச்சிறை

கட்டி யணைக்குது பள்ளீரே.

அத்தி - பாற்கடல். சுடிகை - உச்சி, முடி. இங்கே (ஆதி சேடன்) உச்சி. பச்சைமுகில் - திருமால்; அன்மொழி. அத்தி - யானை. விழித்திரி - மூன்றுகண்; திரிவிழி என மாறுக. முத்து - முத்துமாலை; ஆகுபெயர். அக்குவலைச்சியர்-சங்காலாகிய வளையலை யுடையவர்; - வளைச்சியரென்பது வலைச்சியர் என லகரளகர ஒற்றுமையால் நின்றது. அன்னத்திரள் - அன்னக்கூட்டம். சிறை - சிறகு. அணைக்குது - அணைக்கிறது என்பதன் சிதைவு. ()

வடிக்குஞ் சகல கலைகள் போற்றும்

வள்ள லைங்கர னாட்டிலே

தெரிக்குங் கழனிப் பயிர்கள் வளர்ந்து

செறிந்து விளைந்து சரிந்தவே.

ஐங்கரன் - விநாயகன். செறிந்து - நெருங்கி. சரிந்த - சாய்ந்த; அன் - சாரியையின்றி வந்தது. (123)

தேன்பயி லுந்தடஞ் சோலைப்பெருந்

தென்பருளையி னுதன்றிகழ்

வான்செறி யும்பண்ணை மீதேகதிர்

வாய்க்குங்குலைச் செந்நெருமீன

கூன்பிறை நேரிரும் பாலே மள்ளர்
கொய்து செய்தே வைக்கும்வேலைக்
கான்செறி தாமரைப் பூமே லன்னங்
கண்டுயில் பாரும் பள்ளீரே.

குலைச்செந்நெல் - நெற்குலைகளையுடைய செந்நெற்பயிர். கூன்பிறைநேர் இரும்பு - வளைந்த பிறையை யொத்த அரிவாள்; இரும்பு - கருவியாகு பெயர். (124)

கொந்தவிழ் தாமப் பொற்றொடை யான்மத
குஞ்சர வானனமுடையா னனு கூலன்
றிரி சூலன் றரு பாலன் புனை நூலன்
கந்தனை வாய்ந்திடு துணையா னன்பர்
கருத்திலேயன் றிணையான் றழை காதன் றெய்வ
நாதன் சிவபோதன் றிருநாட்டில்
செந்துவர்க் காய்க்குலை கனத்தேய் வயற்
செந்நெற் குழாங் குயத்தாலே யரிதீரம்
மரி தீரம் மரி தீரம் மெனு நேரம்
வெந்திறல் வேலை யடர்த் தேவரி
மேவு கயற்கண்ணியாரே வாழை மேற்றிண்
குலைத் தாற்றின் கவி யேற்றந் தனைப் பாரீர்.

திரிசூலன் - சிவன். குயத்தால் - அரிவாளால். அரிதீர் - அரிவீர்; அரிவீர் என்பது அரிதீர் எனத் துச்சாரியை பெற்றது; அடுக்குவிரைவின் மேற்று. கவி - குரங்கு. (125)

வீறுயர் பாரதக் கதைநா லம்பொன்
மேருவிற் றீட்டிய பெருமான் றிரை
யாறணி சேகரன் மருமா னானை
மாமுகன் தன்றிரு நாட்டிற்

காறகை யாவெழு சாலிப் பசுங்
காயடி யோதையைக் கண்டே வயற்
சேறளை மீன்குதித் தறுமீன் மட்டுஞ்
சேர்வது பாரும் பள்ளீரே.

ஆறு அணி சேகரன்-கங்கையைத் தரித்த சிரசையுடையவன் (சிவபெருமான்). கால் தகையா - காற்றைத்தடுத்து. சாலிப் பசுங்காய் - நெற்பயிரின் முதிர்ந்த நெற்குலை. அறுமீன் - ஆரல் மீன் (ஆகாயத்தில் தோன்றும் நட்சத்திரம்). (126)

* * * * *

[இறுதியில் சில பாக்கள் சிதைந்தன]

## பருளை விநாயகர் பள்ளு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீலஸ்ரீ சபாபதி நாவலரவர்கள்

மைத்துனரும் மாணாக்கருமாகிய

ச. சிவப்பிரகாச பண்டிதரவர்கள்

பாடிய

# பருளை முருகர் இரத்தினத் திரயம்

திருவளர் கமலநன் மலருறை பவனுந்
திகிரியை முதலையில் விடுமொரு முகிலும்
இருவரு மடிமுடி தருவினர் மலைய
விருள்கெட வெழுமர னுதல்விழி வருவோய்
குருவென வழிபடு குறுமுனிக் கருணைக்
குணமுள தமிழியல் வரன்முறை யருள்வாய்
சுருதியின் முடிவினின் வருமொரு பொருளே
சுழிபுர நகருறை சுரர்குல பதியே. (1)

கருவினின் வருதலை யொழியம படர்கள்
கடுகிமுன் வருதலை நசியிரு கனக
மருவிய மலையென வருதன மடவார்
மரபினின் வழிசெலு மனமதை யொழிநின்
னிருதிரு வடியென துளமன* வருள்வாய்
யிமையவ டருசர வணபவ குகனே
சுருதியின் முடிவினின் வருமொரு பொருளே
சுழிபுர நகருறை சுரர்குல பதியே. (2)

தருநிழ லரசுசெய் மகபதி முதலோர்
தமதிடர் களையமுன் னரன்விழி வருவோய்
அருவமு முருவமு மருவுரு வமுமென்
றறைநவ வடிவமுன் னரியவொர் சொருப
திருவரு ளறுமுக சரவண பவமெய்
திகழ்தரு குகவெனை யடிமைகொண் டருள்வாய்
சுருதியின் முடிவினின் வருமொரு பொருளே
சுழிபுர நகருறை சுரர்குல பதியே. (3)

* 'மன்ன' என்பதன் தொகுக்கும் வழித் தொகுத்தல்.

## பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 3 | 25 | திடுபுகுழி புரஙக | திடுசுழி புரஙக |

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர்.

ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றுஅதன் காப்பு.

—திருக்குறள்

